# ஜீவாத்மாவின் நீண்ட பயணம்

-சாந்திப்பிரியா-

இந்த கட்டுரை ஒருவர் இறந்த பின் அவர் உடலில் இருந்து வெளியேறும் ஜீவாத்மா பயணிக்கும் பாதை, அவை எப்படி சடங்குகளை ஏற்றுக் கொள்கின்றன, சடங்குகள் எதற்காக செய்யப்படுகின்றன போன்றவற்றை விவரிக்கின்றது

# சின்ன முன்னுரை

இறந்தவர் வீடுகளில் 12 நாட்கள் சடங்குகள் முடிந்த பின்னர் 13 ஆம் நாளான சுபஸ்வீகாரம் அன்று மாலை புரோகிதர்களால் கூறப்படும் கருட புராண கதையை நான் இரண்டு அல்லது மூன்று இடங்களில் கேட்டதுண்டு. இது பெரும்பாலான இந்துக்களின் வீடுகளில் செய்யப்படும் ஒரு சடங்கு முறை ஆகும் .

கருட புராணம் என்பது விஷ்ணுவிற்கும் அவரது தெய்வீக வாகனமான கருடனுக்கும் இடையிலான உரையாடல்; மரணத்திற்குப் பிறகு ஜீவாத்மா செல்லும் பயணத்தை விஷ்ணு பகவான் கருட பகவானுக்கு விவரிக்கிறார். ஒரு ஜீவாத்மா உடலை விட்டு வெளியேறிய பிறகு பித்ரு லோகத்திற்கு செல்லும் வரையிலான பயணத்தை கருட புராணம் விவரிக்கிறது, பித்ரு லோகம் என்பது நமது மூதாதையர்கள் வசிக்கும் இடமாகும்.

எளிதில் செல்ல முடியாத ஆபத்தான பாதையில் ஜீவாத்மா பயணிக்கும் போது அது எதிர்கொள்ளும் துயரங்களையும், துன்பங்களையும் விவரிப்பது கருட புராணம்; இறந்தவரின் குடும்பத்தினரால் செய்யப்படும் சடங்குகள் அந்த ஜீவாத்மா பித்ரு லோகத்திற்கு செல்லும் வழியில் எந்த கொடுமைகளையும் அனுபவிக்காமல் செல்ல முக்கிய பங்கு வகிக்கின்றன.

பண்டைய காலத்தில் நமது முன்னோர்களால் கடைப் பிடிக்கப்பட்ட மரபுகள் மற்றும் கலாச்சாரங்களைப் புரிந்து கொள்ளவும், சடங்குகள் மற்றும் அவற்றில் உள்ள ஆழமான அர்த்தங்களைப் புரிந்து கொள்ளவும், இளைய தலைமுறையினருக்கு அவற்றை ஒரு கல்வி போதனைப் போல கற்பிப்பதே கருட புராணத்தை விளக்குவதின் நோக்கமாக இருக்க வேண்டும்.

கருட புராண பாராயணத்தை கேட்பதின் மூலம், யம லோகம் வழியாக பித்ரு லோகத்திற்குச் செல்லும் ஜீவாத்மா

அதன் கடந்த கால பாவங்களிலிருந்து விடுபட்டு, எம கணங்களினால் நல்ல முறையில் அழைத்துச் செல்லப்படவும், அதற்கு இறுதி விடுதலை அல்லது முக்தி அடையவும் உதவுகிறது என்று நம்பப்படுகிறது. மேலும், இந்த பாராயணம் ஒவ்வொரு குடும்பத்தினரும் கடைபிடிக்க வேண்டிய ஆன்மீக செயல்பாட்டை விளக்குகின்றது; அதை கேட்பதில் மூலம் அவர்களின் மனதின் துக்கம் விலகி மன ஆறுதல் அடைய வழி வகுக்கின்றது.

தமிழ்நாட்டின் பல ஆலயங்களுக்கும் நான் சென்றபோது அங்கிருந்த பண்டிதர்களோடு நடத்திய சம்பாஷணையில், நான் புரிந்து கொண்டவற்றின் அடிப்படையில், இரண்டு அல்லது மூன்று முறை சுபஸ்வீகாரத்தில் கேட்ட கருட புராணக் கதை மற்றும் பிற ஆதாரங்களில் இருந்து சேகரிக்கப்பட்ட செய்திகள் மற்றும் சடங்குகளின் அர்த்தங்களையும் புரிந்து கொண்ட பின்னர் அவற்றை சுருக்கமாக விளக்க முயற்சித்தேன், இதனால் எதிர்கால சந்ததியினர் பண்டைய காலங்களில் நாம் கடை பிடித்த மரபுகள் என்ன, அந்த நம்பிக்கைகளில் எத்தனை அறிவியல் மற்றும் புனிதத்தன்மை கொண்டவை என்பதைப் புரிந்துகொள்ள உதவும்.

**Dt: 25-09-2025**

***Santhipriya***
***(N.R. Jayaraman,***
***nrj1945@gmail.com)***



# நூலாசிரியர்

1945 ஆம் ஆண்டு தமிழ்நாட்டில் பிறந்த நான் அச்சுக் கலை தொழிற் கல்வி படித்து விட்டு, மத்திய அரசுத் துறையில் பணி புரிந்த பின் ஒய்வு பெற்று தற்போது '**சாந்திப்பிரியா**' என்ற புனைப்பெயரில் எழுதுகின்றேன். இந்திய அரசின் அறிவியல் மற்றும் தொழில் துறை ஆராய்ச்சி நிறுவனம் (CSIR), காகித நாணயம் அச்சிடும் அச்சகம் (Bank /Currency notes) போன்ற இடங்களில் மூத்த அதிகாரியாக பணி புரிந்து 2005 ஆம் ஆண்டு ஒய்வு பெற்ற பிறகு, சிறிது காலம் சில தனியார் நிறுவனங்களுக்கு ஆலோசகராக பணியாற்றினேன். காகித நாணயங்களில் காணப்படும் வரிசை எண் (Serial) அச்சடிக்கும் புதிய நுட்பத்திற்கான காப்புரிமையை பெற்றேன். கள்ள நோட்டு அச்சுறுத்தல் குறித்த ஒரு ஆய்வறிக்கையை வழங்க ஹாங்காங்கில் நடந்த சர்வதேச மாநாட்டில் சிறப்பு அழைப்பாளராகப் பங்கேற்றேன் .

'**சாந்திப்பிரியா**' என்ற புனைப்பெயரில், பல ஆலயங்கள், மகான்கள் மற்றும் பிற ஆலய வரலாற்றுக் கதைகளை உள்ளடக்கிய 1500 க்கும் மேற்பட்ட ஆன்மீகக் கட்டுரைகளை ஆங்கிலம் மற்றும் தமிழில் எழுதி, எனது சொந்த வலைத்தளமான https://pages.santhipriya.com/இல் வெளியிட்டுள்ளேன். பல்வேறு வலைத்தளங்களுக்காக 2500க்கும் மேற்பட்ட பக்க ஆங்கிலக் கட்டுரைகளை தமிழில் மொழி பெயர்த்துள்ளேன். நான் எழுதிய சில புத்தகங்கள் ஆன்மீக அறிவைப் பரப்புவதில் ஈடுபட்டுள்ள சில குழுக்களால் வெளியிடப்பட்டுள்ளன, மேலும் சில விரைவில் வெளியிடப்பட உள்ளன. அச்சுக்கலை பயிற்சி மாணவர்களுக்கு உதவ, https://printing.santhipriya.com/ என்ற வலைத் தளத்தில், கட்டுரைகள் மற்றும் கேள்வி பதில்களை வெளியிட்டு வருகின்றேன்.

# ஜீவாத்மாவின் பயணம்-1
# ஜீவாத்மா, ஸ்தூல சரீரம், சூஷ்ம சரீரம், பித்ருக்கள், ஆதித்யர்கள், ருத்ரர்கள், வசுக்கள்

**1)** கண்களுக்கு தெரியாமல் உடலுக்குள் உள்ள ஜீவாத்மாவை ஜீவாத்மா அல்லது சூஷ்ம சரீரம் என்றும், உடலை ஸ்தூல சரீரம் என்றும் கூறுவார்கள். எப்போது அந்த சூஷ்ம சரீரம் அது குடி இருந்த ஸ்தூல சரீரத்தை விட்டு வெளியேறிச் செல்கின்றதோ அந்த நிலையையே மரணம் என்கின்றோம். ஜீவாத்மாவுக்கு அழிவில்லை. ஒரு உடலில் வாழும் ஜீவாத்மாவிற்கு நிர்ணயிக்கப்பட்டு இருந்த கால அளவு முடிந்தவுடன், தான் வாழ்ந்து கொண்டிருந்த ஸ்தூல சரீரத்தை விட்டு வெளியேறி மேலுலகிற்கு சென்று அதன் பாவ புண்ணிய கர்ம வினைக்கேற்ப தண்டனைகளை அனுபவித்த பின்னர் மீண்டும் இன்னொரு பிறவியின் ஜீவாத்மாவாக வெளி வருகிறது என்பதே உயிர் தத்துவம் ஆகும்.

**2)** எனவே ஒவ்வொரு ஜீவாத்மாவும் பரபிரும்மனிடத்தில் இருந்து பிரும்மா மூலம் வெளிப்பட்ட தெய்வீக சக்திக் கதிர்கள் ஆகும். அந்த ஜீவாத்மாக்களே மானிடர்களாக, மிருகங்களாக பறவைகளாக பிறப்பை எடுக்கின்றன

**3)** ஜீவாத்மா என்கிற உருவமற்ற ஜீவன் வாழும் ஸ்தூல சரீரத்தில் (அதையே ஜடமான உடல் என்கின்றோம்) கண்ணில் ஸூர்யன், வாயில் அக்னி, கையில் இந்திரன் போன்றவை உள்ளடக்கிய பதினைந்து தெய்வீக ஆற்றல்கள் உள்ளன. ஜடமான உடலையே பதினாறாவது தெய்வ அம்சம் என்கின்றோம். பதினைந்து தெய்வீக சக்திகளும் ஞானேந்திரியங்கள் எனப்படும் ஐந்து புலன் உறுப்புகள், கர்மேந்திரியங்கள் எனப்படும் ஐந்து செயல் உறுப்புகள் மற்றும் பிராணங்கள் எனப்படும் ஐந்து சுவாசங்கள் என வகைப்படுத்தப்பட்டுள்ளன. இதனால்தான் ஜடமான உடலில் இருந்து ஜீவன் வெளியேறிய பின்னர், தெய்வாம்சம் மிக்க அந்த உடலை

இறைவனுக்கு அர்ப்பணிக்க வேண்டும் என்பதற்காக பிரேத ஸம்ஸ்காரங்களை செய்கின்றார்கள்.

**4)** யாகத் தீயில் போடப்படும் தானியங்கள், நெய் , சந்தனக் கட்டை மற்றும் பிற பொருட்களை போன்றே யாகத் தீயைப் போன்று சிதையில் எரியும் நெருப்பின் வழியே தெய்வாம்சங்களைக் கொண்ட பதினைந்து ஆற்றல்களையும், பதினாறாவது தெய்வ அம்சமான ஸ்தூல சரீரத்துடன் மேலுலகிற்கு திருப்பி அனுப்பி வைக்கின்றோம். இதனால்தான் சாஸ்திரங்களில் தகனம் செய்வதை 'அந்த்யேஷ்டி' அதாவது 'இறுதி வேள்வி' என்றே மிக உயர்வாக சொல்லப்பட்டு உள்ளது.

**5)** பித்ரு கர்மாவில் செய்யப்படும் கர்மாக்கள் மூலம்தான் மரணம் அடைந்தவரது ஜீவாத்மாவையும், சரீரத்தில் இருந்த பதினைந்து ஆற்றல்களையும் அதனதன் ஸ்தானத்துக்கு திருப்பி அனுப்பி வைக்கிறோம் என்பது அந்த பன்னிரண்டு நாட்கள் கூறப்படும் மந்திர உச்சாடனைகள் மூலம் அறிந்து கொள்ளலாம்.

**6)** மரணம் அடைந்தவருக்கு முதல் பன்னிரண்டு நாட்கள் செய்யப்படும் கர்மாக்கள் பித்ரு கர்மா எனப்படும். ஆனால் பதிமூன்றாம் நாளன்று நடைபெறும் சுபஸ்வீகாரம் எனும் சுப நிகழ்வில் நண்பர்கள் மற்றும் உறவினர்கள் கலந்து கொண்டு இறந்து போனவர்களின் உறவினர்களோடு சேர்ந்து உணவு அருந்தி, தான தர்மங்களில் பங்கேற்கிறார்கள்.

**7)** பின்னர் ஒவ்வொரு வருடமும் அதே திதியில் செய்யப்படும் சடங்கிற்கு சிரார்த்தம் அல்லது திவசம் என்பது பெயர்.

**8)** மரணம் அடையும் சூஷ்ம சரீரமான ஜீவாத்மாவானது (ஜீவாத்மா) பிரும்ம தேவரால் படைக்கப்பட்டுள்ள வசுக்கள், ஏகாதச ருத்திரர்கள் மற்றும் ஆதித்யர் என்கின்ற துவாதசாதித்யர் போன்றவர்களின் பாதுகாப்பில் இருப்பார்கள்.

**9)** பூவுலக வாழ்க்கைக்கு எப்படி பூதேவி, இந்திரன், அக்னி, வாயு மற்றும் வருணன் போன்றவர்கள் முக்கியமோ அப்படித்தான் மரணம் அடைந்து விட்டவர்களின் ஜீவாத்மாக்களை காப்பாற்ற பிரும்மனால் படைக்கப்பட்ட எட்டு வசுக்கள், 11 ஏகாதச ருத்திரர்கள் மற்றும் ஆதித்யர்

என்கின்ற துவாதசாதித்யர் போன்றவர்களின் பாதுகாப்பில், 12 ஆம் நாள் சடங்கு முடியும்வரை மரணம் அடைந்து விட்டவர்களின் ஜீவாத்மாக்கள் இருப்பார்கள்.

**10)** பல்லாயிரக்கணக்கான கோடி பித்ருக்கள் தேவலோகத்தில் உள்ளார்கள். அவர்கள் வம்சாவளியாக பிரிக்கப்பட்டு வைக்கப்பட்டு உள்ளார்கள். ஒவ்வொருவருடைய பித்ருக்களின் மரணம் அடைந்து விட்ட ஆறு வம்சாவளியினரும் தேவலோகத்தில் உள்ளார்கள் (ஒருவரது குடும்பத்தினரோடு ஆறு வம்சாவளியினரும் சேர்ந்து மொத்தம் ஏழு வம்சங்கள்). அவர்களது ஏழாவது அல்லது எட்டாவது அல்லது ஒன்பதாம் வம்சாவளியினர் மரணம் அடைந்து அவர்களின் ஜீவாத்மாக்கள் தேவலோகத்தை சென்றடையும்போது, முதல் மூன்று நிலைகளில் உள்ள பித்ருக்கள் அடுத்த பிறவியை எடுக்கும் முன்னர் பிரும்மாவினால் தெய்வ அம்சம் மிக்க வசுக்கள், ஆதித்யர்கள் மற்றும் ருத்திரர்களுக்கு உதவி புரிய அவர்களது உதவியாளர்களாக நியமிக்கப்படுகிறார்கள். சில காலம் பொறுத்து அவரவர்களின் கர்ம விதிக்கேற்ப மானிடர்கள், விலங்குகள், பூச்சிகள் என ஏதாவது ஒரு பிறப்பை எடுக்கின்றார்கள்.

**11)** இந்த நிலை சுழன்று கொண்டே இருக்கும் சக்கரத்தைப் போன்றது என்பதினால் எப்போதும் தேவலோகத்தில் நமது ஆறு வம்ச பித்ருக்கள் நமது பித்ருக்களோடு (ஒருவரது குடும்பத்தினரோடு ஆறு வம்சாவளியினரும் சேர்ந்து மொத்தம் ஏழு வம்சங்கள்) தங்கி இருப்பார்கள் என்பதாக கூறப்படுகின்றது. ஆகவேதான் தேவலோகத்தில் உள்ள பித்ருக்கள் அங்கு தங்கி உள்ள காலம் நிலையானது அல்ல என்பது புரிகின்றது.

**12)** இந்த உலகில் பல கோடி ருத்திரர்கள் உள்ளதாகவும் அதில் இந்த 11 ஏகாதச ருத்ரர்களே முக்கியமானவர்கள் என்றும் கூறப்படுகின்றது. ருத்ரர்கள் பயங்கர முகத் தோற்றம் உடையவர்கள். கண்களுக்கு தெரியாமல் பிரேதமாகவும், பிசாசுகளையும் மற்றும் பூதமாக விண்வெளியில் அலைந்து திரியும் தீய ஜீவாத்மாக்களை கட்டுப்படுத்தி வைக்கும் அதிபதிகள் அவர்கள்.

**13)** ருத்திரர்களுக்கு உருவம் இல்லை என்பதாகவும், அவர்கள் பதினோரு லிங்க உருவில்தான் பூஜிக்கப்படுகின்றார்கள் என்று கூறப்பட்டாலும் காஞ்சி கைலாசநாதர் கோவிலில் ஏகாதச ருத்ரர்கள் சிற்பங்கள் காணப்படுகின்றன என்பதாகவும் கூறுகின்றார்கள்.

**14)** ருத்ரர்கள் படைக்கப்பட்டதில் புராணங்களில் இரு கதைகள் உள்ளன. முதலாவது கதையின்படி அவர்களை சிவபெருமான் படைத்ததாகவும், இரண்டாம் கதையின்படி அவர்களை பிரம்மன் படைத்ததாகவும் உள்ளது. முதலில் பிரும்மா படைத்த நான்கு சனத் குமாரர்களும் ஞான மார்கத்தில் சென்று விட்டதினால், வசுக்களுடன் சேர்ந்து உடலில் இருந்து வெளியேறிய ஜீவாத்மாக்களை காப்பாற்ற பகவான் பிரும்மாவே பதினோரு ருத்ரர்களை படைத்தாராம். சிவபெருமான் மூலம் அவதரித்த ருத்ரர் வேறு, இந்த ருத்ரர்கள் வேறு ஆகும்.

**15)** மானிடர்கள் பிரம்மாவினால் படைக்கப்பட்டவர்கள் என்பதினால் அனைவரது ஜீவாத்மாக்களும் அவர் கட்டுப்பாட்டில்தான் உள்ளன. ஆகவே மரணம் அடைந்து விட்டவர்களின் ஜீவாத்மாக்கள் யமலோகத்திற்கு செல்லும்வரை அந்த ஜீவாத்மாக்களை காப்பாற்ற வேண்டியது பிரம்மனின் கடமை. உடலில் இருந்து வெளியேறும் ஜீவாத்மாவை, அகண்ட வெளியில் சுற்றித் திரியும் பேய், பிசாசு மற்றும் பூதகணங்கள் தமது கட்டுப்பாட்டில் எடுத்துக் கொண்டு விடக் கூடாது என்பதற்காக, யமலோகத்திற்கு பயணிக்கும் ஜீவாத்மாக்களின் பாதுகாப்பிற்காக பிரும்மாவினால் ருத்ரர்கள், வசுக்கள் மற்றும் ஆதித்யர்கள் படைக்கப்பட்டார்கள்.

**16)** அஷ்ட வசுக்கள் யார்? அஷ்ட வசுக்கள் என்பவர்கள் மனுவின் மைந்தனான பிரஜாபதியின் எட்டு மகன்கள் என்கின்றார்கள். புராணங்களின் கூற்றின்படி அஷ்ட வசுக்கள் எனப்படும் தேவதைகள் இந்திரனின் காவல் தெய்வங்கள். வசு எனும் சொல்லுக்கு வெளி (Space) என்று பொருள். இவர்கள் குறிப்பிட்ட இயற்கை தன்மைகளை உள்ளடக்கியவர்கள்.

**17)** அஷ்ட வசுக்களில் தரா எனும் வசு புவியையும், அனலன் எனும் வசு நெருப்பையும், ஆப எனும் வசு நீரையும்,

அனிலன் எனும் வசு காற்றையும், துருவன் எனும் வசு துருவ நட்சத்திரத்தையும், சோமன் எனும் வசு சந்திரனையும், பிரபாசன் எனும் வசு கதிரவன் எழும் முன் உள்ள விடியற் காலைப் பொழுதையும், பிரத்யூசன் எனும் வசு ஒளியையும் குறிப்பவர்கள். அப்படிப்பட்ட புண்ணியமும் சக்தியும் கொண்ட அஷ்ட வசுக்கள் வசுக்களின் ருத்ரர்கள், மற்றும் ஆதித்யர்கள் பாதுகாப்பில்தான் இறந்தவர்களது ஜீவாத்மாக்கள் அவர்களுக்காக செய்யப்படும் கர்மாக்கள் முடியும்வரை தங்கி இருக்கும் என்பது ஐதீகம்.

**18)** மூல வசுக்களின் கடமைகளை நிறைவேற்ற அவர்களுக்கு துணையாக பல்லாயிரக்கணக்கான துணை வசுக்கள் பிரும்மாவினால் நியமனம் செய்யப்பட்டு உள்ளார்கள். அவர்களில் நமது வம்சத்தை சேர்ந்த பல பித்ருக்கள் அடங்கி உள்ளார்கள். அந்த வசுக்களே தத்தமது வம்சத்தை சேர்ந்த இறந்தவர்களின் ஜீவாத்மாவை மூல வசுக்களுக்கு அடையாளம் காட்டுவார்கள்.

**19)** சூரிய பகவான் தேவர்களின் தலைவர். அவர் தனது ஒளிக்கிரணங்களில் பன்னிரண்டு தன்மைகளைக் கொண்ட ஆதித்யர்களை வைத்து உள்ளாராம். ஆதித்யர்களை துவாதசாதித்யர் (துவாத + ஆதித்யர்) என்ற பெயரிலும் குறிப்பிடுகின்றார்கள். அந்த பன்னிரண்டு ஆதித்யர்களே உயிர் வாழத் தேவையான தன்மைகளை வைத்து உள்ளவர்கள்.

**20)** இறந்தவரின் உடலில் இருந்து வெளியேறும் ஜீவாத்மாக்களின் கர்ம காலம் முடியும்வரை ஆதித்யர்களின் உயிர் வாழத் தேவையான தன்மையினால்தான் ஜீவாத்மாக்கள் யமலோகம் செல்லும்வரை அழிவின்றி இருப்பார்கள்.

**21)** மூல ஆதித்யர்களின் கடமைகளை நிறைவேற்ற அவர்களுக்கு துணையாக பல்லாயிரக்கணக்கான துணை ஆதித்யர்கள் நியமனம் செய்யப்பட்டு உள்ளார்கள். அவர்களிலும் ஒவ்வொருவருடைய வம்சத்தை சேர்ந்த பல பித்ருக்கள் அடங்கி உள்ளார்கள்.

**22)** மறைந்து விட்ட நம் முன்னோர்களான பித்ருக்களே ஆதித்யர்கள், ருத்ரர்கள், வசுக்கள் ஆகிய மூன்று உருவில் இருக்கிறார்கள் என்பதினால்தான் அவரவர் குடும்பத்தைச் சேர்ந்த இறந்தவர்களது

ஜீவாத்மாவை, அடையாளம் காட்டுவார்கள் என்பது ஐதீகம்.

**23)** இந்து மதத்தின் முக்கியமான நூல்கள் ரிக்வேதம், ‘இறந்தவர் உடலில் இருந்து வெளியேறிச் செல்லும் ஜீவாத்மாவானது தன் பயணத்தை முடித்துக் கொண்ட பின்னர் இந்த பிரபஞ்சத்தில் தான் தோன்றக் காரணமான பரமாத்மாவுடன் மீண்டும் கலந்து விடுகிறது அல்லது பித்ருக்களாக மாறி விடுகின்றன என்கின்றது’ என்று கூறுகிறது.

**24)** ‘ஜீவாத்மாவும், பரமாத்மாவும் வேறு, வேறு அல்ல; இரண்டும் ஒன்றே. மாயையின் சேர்க்கையினால், அந்த ஒன்றே பலவாறாக காட்சித் தருகின்றது’ என்று அத்வைதம் கூறுகிறது.

**25)** 'எப்படி சரீரத்தின் செயல்பாடுகளுக்கும் ஜீவாத்மா அவசியமோ, எப்படி ஜீவாத்மா சரீரத்தில் இருந்து வெளியேறி விட்டால் உடல் அழிந்து விடுமோ, அதே போலவேதான் ஜீவாத்மா என்பது, பரமாத்மாவின் உடல் போன்றது. ஜீவாத்மா இல்லாத பரமாத்மாவும், பரமாத்மன் இல்லாத ஜீவாத்மாவும் கிடையாது' என்பதாக துவைதம் கூறுகின்றது.

**26)** ஒவ்வொரு ஜீவாத்மாவிற்கும் பிறப்பும் இறப்பும் ஒரு சக்கரம் போல உள்ளது. அவற்றுக்கு விதிக்கப்பட்டுள்ள ஜனன மரண காலம்வரை அவை ஒரு உடலில் வாழ்கின்றன. அந்த காலம் முடிந்த பின் யமலோகத்திற்கு சென்று தமது கர்மாக்களுக்கு ஏற்ப தண்டனைகளை அனுபவித்த பின்னர் வெவ்வெறு உடல்களில் சென்று தங்குகின்றன.

**27)** ‘எப்படி ஒருவன் பயன்படுத்த முடியாத துணிகளை தூக்கி எறிந்து விடுவானோ, அதை போலவேதான், ஜீவாத்மாவும் ஒவ்வொரு உடலிலும் தங்க வேண்டிய காலம் முடிவடைந்ததும், அந்த உடலில் இருந்து வெளியேறி இன்னொரு உடலில் குடி கொள்ளும். ஜீவாத்மாவை எந்த ஆயுதத்தாலும் அழிக்க முடியாது; தண்ணீர் விட்டு துவைக்கவோ, உலர வைக்கவோ முடியாது; காரணம் மானிடர்களின் கண்களுக்கு புலப்படாத ஜீவாத்மாவிற்கு, எந்த ரூபமும் கிடையாது’ என்று பகவத் கீதை கூறுகின்றது.

**28)** பிரகதாரண்யக உபநிடம் ஜீவாத்மாவைப் பற்றிக் குறிப்பிடுகையில் 'ஜீவாத்மா என்பது 'பார்க்கப்படாமல் பார்க்கும், கேட்கப்படாமல் கேட்கும், நினைக்கப்படாமல் நினைக்கும், அறியப்படாமல் அறியும். ஒருவனது உடலுக்குள் உள்ளுறைவது, அழிவற்றது என்பதே ஜீவாத்மா' என்பதாக கூறுகின்றது.

**29)** முற்றிலும் சுதந்திரமான ஜீவாத்மா ஒருவர் உடலை விட்டு வெளியேறும் போது மற்றவர் துக்கப்படக் கூடாது. மாறாக, அது நல்ல முறையில் அதன் அடுத்த கட்ட பயணத்தை தொடர வேண்டும் என்பதற்காக, அதற்கான கிரியைகளை முன்னோர்கள் கூறி உள்ள முறையில் உணர்ச்சி பூர்வமாக செய்ய வேண்டும் என புரோஹிதர்கள் கூறுகின்றார்கள்.

**30)** மானிடர்களின் சரீரத்தில் குடி இருக்கும் ஜீவாத்மாக்கள் சுதந்திரமானவை, எதற்கும் கட்டுப்பட்டவை அல்ல, அவை உடலின் எந்த செயல்பாட்டையும் இயக்குவது இல்லை என்பதாக புராணங்களிலும், சாஸ்திரங்களிலும் கூறப்பட்டாலும், அவை தங்கி உள்ள உடல்களில் ஐம்புலன்களின் செயல்பாடுகளினால் ஏற்படும் பாவ புண்ணியங்களை வேறு வழி இன்றி அவைகளும் சுமந்து கொண்டு கர்மாக்களை பெறுகின்றன. அதனால்தான் அந்த ஜீவாத்மாக்களும் வெவ்வெறு பிறப்புகள் எடுத்து கர்மாக்களை அழிக்க வேண்டி உள்ளது.

**31)** யாராக இருந்தாலும் சரி, அவர்கள் பூமியில் வாழ்ந்து இருந்தபோது செய்த பாவ புண்ணியங்களின் கர்மாக்களை அனுபவித்தே ஆக வேண்டும் என்பது இறைவனின் நியதி என்பதினால், மரணம் அடைந்தவருக்காக செய்யும் மரணச் சடங்குகள் அல்லது கிரியைகள் மூலம் அந்த ஜீவாத்மாக்கள் மன சாந்தி பெற்று எதையும் எதிர் கொள்ளும் மன நிலையில் இயற்கையோடு வாழத் துவங்கும்.

**32)** கர்மாக்கள், பிறப்பு, இறப்பு, பாவ புண்ணியம், கிரியைகள் மற்றும் சடங்குகள் போன்ற அனைத்துமே இறைவன் நிர்ணயித்து உள்ள நாடகத்தின் வடிவங்களே. அதன் கதாநாயகனே ஜீவாத்மா என்பது என பல ஆன்மீக அமைப்புகள் கருத்துக்களை தெரிவிக்கின்றன.

**33)** பூலோகத்திற்கும் யமலோகத்திற்கும் இடையே சுமார் 86,000 காத தூரம் (சுமார் 1,100,000 கிலோமீட்டர்) இருப்பதாகவும், அந்த அளவிலான பாதையை கடந்து செல்வதற்கு ஆன்மாக்களுக்கு ஒரு வருடம் வரை ஆகும் என்று கருட புராணத்தில் கூறப்பட்டு உள்ளது என்பதினால் ஒருவர் மரணமடைந்த ஒரு வருடத்திற்குப் பின்னரே அவரது ஜீவாத்மா (ஜீவாத்மா) எமபுரிக்குள் நுழைய முடியும்.

**34)** ஒரு வருட பயண முடிவில், யம தூதர்களினால் அழைத்து செல்லப்படும் ஜீவாத்மா யமபுரியில் யமதர்மன் முன் விசாரணைக்கு நிறுத்தப்படும். அங்கு அந்த ஜீவாத்மாவின் முன்னிலையில் 12 எம கணங்கள், அந்த ஜீவாத்மா மீதுள்ள பாவ புண்ணிய கணக்குகளைப் யமதர்மனிடம் தெரிவிப்பார்கள். அவற்றின் அடிப்படையில் யமதர்மன் அவற்றுக்கு தண்டனை தருகின்றார் என்பதாக கருட புராணத்தில் கூறப்பட்டு உள்ளது.

**35)** ஜீவாத்மா உருவமற்றது எனக் கூறப்படுகையில் எம தர்மன் முன்னால் எப்படி ஜீவாத்மா கொண்டு சென்று நிறுத்தப்படுகிறது? அது முரண்பாடாக உள்ளதே என நினைக்கலாம். ஆனால் அது முரண்பாடு அல்ல.

**36)** மரணம் அடைந்தவர் உடலில் இருந்து வெளியேறும் ஜீவாத்மா, பூமியில் உள்ள மானிடர்களின் கண்களுக்கு புலப்படாத, ஆனால் தேவலோகத்தினருக்கு மட்டுமே தெரியும் வகையிலான, மரணம் அடைந்தவரது தோற்றத்தை மட்டும் அல்ல, அவரது மன எண்ணங்களின் தன்மையையும் கொண்ட சூஷ்ம உருவிலான கணமாக வான்வெளியில் பெற்று விடுவதினால், அந்த சூட்சும உருவிலான ஜீவாத்மாவை வசுக்கள், ஆதித்யர்கள் மற்றும் ருத்திரர்களும், யம லோக தூதுவர்களும் பித்ரு தேவதைகளும் அடையாளம் கண்டு கொள்ள முடிகின்றது. ஜீவாத்மா தேவலோகத்துக்கு பித்ரு கணமாக செல்லும் வரை அந்த சூட்சும உருவிலான தோற்றமும் தன்மைகளும் நீடிக்கும்.

**37)** ஜீவாத்மா எதற்காக அப்படி சூஷ்ம உருவிலான தோற்றத்தையும், தன்மைகளையும் பெறுகின்றன என்றால் அப்போதுதான் ஜீவாத்மாவிற்கு கொடுக்கப்படும் தண்டனைகளின் இன்ப துன்பங்கள் அதற்கு புரியும். அந்த

ஜீவாத்மாவின் மனத் துயரின் தாக்கங்கள் அந்த ஜீவாத்மாவின் குடும்பங்களை பாதிக்கும் பொழுது அந்த குடும்பத்தினர் அப்படிப்பட்ட தவறுகளை செய்யாமல் இருக்கக் கூடும் என்ற எண்ணமே காரணம் ஆகும்.

**38)** பித்ரு லோகத்தை அடையும் வரை ஆன்மாக்களுக்கு உரிய சடங்குகளைச் செய்யத் தவறினால், குடும்ப உறுப்பினர்கள் கடுமையான மன அழுத்தம், உடல்நலப் பிரச்சினைகள், நிதிச் சிக்கல்கள், மலட்டுத்தன்மை அல்லது அமைதி மற்றும் செழிப்பு இல்லாமை போன்ற துரதிர்ஷ்டங்களைப் பெறுவார்கள். எனவே, கர்த்தாக்கள் சடங்குகளை முறைப்படி செய்ய வேண்டும் என்பதற்காகவே அத்தகைய விதிமுறைகள் அமைக்கப்பட்டு உள்ளன

## ஜீவாத்மாவின் பயணம் -2
## உடலில் இருந்து வெளியேறும் பாதை எது?

**39)** ஒருவர் இறக்கும் போது ஜீவாத்மாவானது உடம்பில் உள்ள பத்து வாசல்களில் ஏதாவது ஒரு வாசல் மூலம் வெளியேறுவதாகவும் இறந்தவுடன் அந்த வாசல் பகுதி சற்று ஈரப்பதமாக காணப்படும் என்றும் அதன் மூலம் ஜீவாத்மா வெளியேறிய பாதையை அனுபவஸ்தர்களினால் உணர முடியும் என்றும் கூறுகின்றார்கள்.

**40)** சாஸ்திரங்களின்படி இறந்தவர்களது ஜீவாத்மா இரண்டு கண்களின் வழியாகவோ, இல்லை வாயின் வழியாகவோ, உச்சி மண்டை வழியாகவோ, ஆசன துவாரத்தின் வழியாகவோ, மூத்திர வாசல் அல்லது இரண்டு காதின் வழியாகவோ அல்லது இரண்டு நாசி துவாரத்தின் வழியாகவோ வெளியேறும் என்பார்கள். இதுவே பொதுவாக ஏற்றுக் கொள்ளப்பட்ட நியதியாகும்.

**41)** தாயின் வயிற்றில் செல்லும் ஜீவனானது அங்கு வளரும் கருவின் உச்சி மண்டையின் வழியாகவே அதனுள் உள்ளே நுழைகிறது என்பது ஆன்மீக நம்பிக்கையாகும். அந்த உச்சி மண்டையைக் கபாலம் என்பர். உச்சி

மண்டையில் புகுந்த அந்த உயிர் உச்சந் தலை வழியாக வெளியேறுவதுதான் சிறப்பு. அதுவே சரியான மரணம், அது புண்ணிய ஜீவாத்மாக்களுக்கு மட்டுமே கிடைக்கும், அதன் பின் ஜீவாத்மா வேறு எந்த பிறவியும் எடுப்பதில்லை என்று புராணங்களில் கூறப்படுவதினால் ஜீவன் வெளியேறும் இடங்கள் பொதுவான பத்து இடங்கள் என்பதை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டி உள்ளது.

**42)** கபாலம் வழியே வெளியேறும் ஜீவனானது பூமியிலே பிறப்பு எடுக்காமல் அவர்கள் வாழ்ந்திருந்த இடத்தின் வான் வெளியிலேயே தெய்வ ஜீவாத்மாவாக தங்கி இருந்து விடுகிறது என்பதும் நம்பிக்கை ஆகும். அதனால்தான் அப்படிப்பட்ட புண்ணிய ஜீவாத்மாக்களை உண்மையான தெய்வம் எனக் கருதி அவர்களுடைய உடலை எரிக்காமல் புதைத்து வைத்து அதன் மீது சமாதியும் கட்டி வைத்து பூஜிக்கிறார்கள்.

**43)** ஆனால் புலிப் பாணி முனிவர் மற்றும் போக முனிவருக்கு உயிர் எந்த விதங்களில் மனித உடல்களில் இருந்து வெளியேறுகிறது என்பதை குறித்து விளக்கிய அகஸ்திய முனிவர் இந்த பத்து மண்டலங்களைத் தவிர ஜீவன்கள் வெளியேற உடலில் ஆயிரக்கணக்கான ஓட்டைகள் உள்ளன என்றும், அந்த இடங்கள் கை, கால் விரல்கள், மற்றும் அவற்றின் இடைப் பகுதியில் உள்ள ஓட்டைகள் என்றும், அவற்றைத் தவிர உடலில் உள்ள பல்லாயிரக்கணக்கான மயிர் கால்களின் அடியில் உள்ள ஓட்டைகளின் வழியாகவும் ஜீவன் வெளியேறும் என்றும், அந்த வழிகளில் வெளியேறும் ஜீவன் என்னென்ன பிறவிகள் எடுக்கின்றன என்பதையும் அவர்களுக்கு எடுத்துரைத்துள்ளதாக கூறப்பட்டுள்ளது.

**44)** அந்தந்த உடல்களின் விதிக்கேற்ப எந்த வாசல் வழியே ஜீவாத்மாவானது வெளியேற வேண்டுமோ, அந்த வாசலில் இருந்து ஜீவாத்மா வெளியேறும்போது உடலின் அனைத்து இயக்கங்களும் நின்று விடும். அப்போது அந்த உடலை சுற்றிக் கொண்டிருக்கும் எம கணங்கள் மூன்றரை மணி நேரம் ஜீவாத்மாவை அங்கேயே தங்க வைத்துக் கொண்டும், கண்காணித்துக் கொண்டும் இருந்த பின்னர், தம்மோடு அழைத்துச் சென்று அந்த ஜீவாத்மாவை

வஸுக்களிடம் சமர்ப்பித்து விட்டு அங்கிருந்து சென்று விடுவார்கள்.

**45)** மூன்றரை மணி நேர கணக்கை ஜீவாத்மாவின் இரண்டாம் கட்ட பயணத்தில் படிக்கலாம் .

## ஜீவாத்மாவின் பயணம் – 3
## மரணம் அடைய உள்ளவரை சுற்றி அமர்ந்து கொண்டு எதற்காக தெய்வீக பாராயணங்களை ஓதுகிறார்கள் ?

**46)** நோயினால் பீடிக்கப்பட்டு, அல்லது வேறு காரணங்களினால் படுத்த படுக்கையாக, சுய நினைவற்று மெல்ல மெல்ல சுவாசம் நிற்கும் நிலையில் வந்து விட்டவர்களையும், மருத்துவர்கள் கை விட்டப் பின், இன்னும் சில மணி நேரத்திலேயே மரணம் அடைய உள்ளவரையும் சுற்றி உள்ளவர்கள், அவர்களுடைய மூச்சு நிற்கும் வரை விஷ்ணு சஹஸ்ரநாமம், நாராயணீயம் போன்றவற்றை பாராயணம் செய்தபடி இருப்பார்கள். சிலர் ராம நாமத்தை ஜெபித்தபடியும் இருப்பார்கள். புனித மந்திரங்களின் ஒலி அதிர்வுகள், வாழ்க்கையின் கடைசி கட்டத்தில் இருப்பவர்களுக்கு மரண பயத்தையும் அதன் வலியையும் குறைத்து, ஒரு அமைதியான, சூழ்நிலையை அவர்கள் மனதில் ஏற்படுத்துகின்றன.

**47)** மரணத்தை தழுவும் நிலையில் உள்ளவர்களின் குடும்பத்தில் மூத்த மகன் இருந்தால், அவர் மரணம் அடைய உள்ளவரின் தலையை தன் தொடையில் வைத்துக் கொண்டு வலது காதில் பஞ்சாக்ஷரி, மற்றும் ராம ராமா, சிவாய நமஹ போன்ற மந்திரங்களை சற்று நேரம் ஓதிக் கொண்டு இருக்க வேண்டும். மரணம் அடையும் முன்னர் மரணம் அடைபவரின் காதுகள்தான் முதலில் செயல் இழந்து விடும்.

**48)** ஒரு சிலர் மரணம் அடையும் தறுவாயில் உள்ளவர் காதில் கர்ண மந்திரத்தைக் கூற வேண்டும் என்பார்கள். கர்ண மந்திரம் என்ன என்பதைக் குறித்த சரியான தகவல்கள் கிடைக்கவில்லை. 'உனது அனைத்து கர்மங்களையும் விட்டு விடு; செயல்களின் பலனைத்

துறந்து விடு; உன் செயல்களின் விளைவுகளையும் ஆராயாமல் இரு' என்பதாக கூறியதே கர்ண மந்திரம் என்கின்றார்கள்.

**49)** சில குடும்பங்களில் சமய தீட்சை பெற்ற ஒருவர் மூலம் வலது காதில் பஞ்சாக்ஷரி, மற்றும் ராம ராமா, சிவாய நமஹ போன்ற மந்திரங்களை ஓதுவார்கள், அது தவறல்ல. ஆனால் கர்மா செய்ய பாத்யதை உள்ள இளைய அல்லது மூத்த மகன் அதை செய்வதின் மூலம் மரணம் அடைய உள்ளவர் மனம் மேலும் அமைதி அடையும் என்பது நம்பிக்கை.

**50)** இது சாஸ்திரங்களில் கூறப்பட்டு உள்ள விதி முறை என்றாலும் தற்காலத்தில் இதை கடை பிடிக்க முடியவில்லை என்பதினால், இறந்து போக உள்ளவரின் தலையின் அடியில் தன் கையை ஒரு நிமிட நேரம் வைத்துக் கொண்டு அவரது காதில் இரு முறை ராம ராமா, சிவாய நமஹ போன்ற மந்திரங்களை கூறினால் கூடப் போதும் என்பதாகவும் கூறப்படுகின்றது.

**51)** சில குடும்பங்களில் மரணம் அடையும் தருவாயில் உள்ளவர்களை சூழ்ந்து கொண்டு பஜனை பாடல்களை பாடுவார்கள். அந்த பக்திப் பாடல்களின் ஒலி அலைகளும் தியான நிலையில் பெறும் மன அமைதியைப் போன்ற நிலையை அந்த ஜீவாத்மாவிற்கு தரும். கர்மா செய்ய உள்ளவன் உச்சரிக்கும் ராம ராமா, சிவாய நமஹ போன்ற மந்திர அலைகள், மரணம் அடைய உள்ளவரின் எண்ண அலைகளை சூழ்ந்து கொண்டு அமைதியை தரும். அது தியான நிலையில் பெறும் மன அமைதியைப் போன்ற நிலையை அந்த ஜீவாத்மாவிற்கு தரும் என்பது ஐதீகம்.

**52)** அனுபவம் மிக்கவர்கள் நாடி பிடித்து பார்த்து ஜீவன் பிரியும் நிலையை உணர்ந்தால் 'யாரும் அழக் கூடாது, ஜீவன் போகப் போகுது, ராம ராம ராமா என்று கூறத் துவங்குங்கள்' என்பார். ராம ராமா, சிவாய நமஹ போன்றவற்றை உச்சரிக்கும்போது எழும் மந்திர அலைகள் அந்த அறையை தெய்வீக அலைகள் சூழ்ந்த இடமாக மாற்றி விடுகின்றது.

**53)** பஜனை பாடல்களை பாடும் மன நிலையில் இல்லாதவர்கள் வீட்டில் தொடர்ந்து சஹஸ்ரநாமம் அல்லது நாராயணீயம், சுந்தர காண்டம், ராம ராமா, கோவிந்த

நமஹா, கோவிந்த நமஹா போன்றவற்றை உச்சரித்துக் கொண்டு இருக்க வேண்டும். இல்லை என்றால் ஒலி நாடாவில் போட்டு அதை அமைதியான சூழ்நிலையில் ஒலி பரப்பினால் அதுவும் நல்லதற்கே. இது சாஸ்திர விதிகளுக்கு உட்பட்டதா என்ற தயக்கம் தேவை இல்லை.

**54)** எதற்காக இவ்வாறான பழக்க முறைகள் கடைபிடிக்கப்படுகின்றன? இறக்கும் தருவாயில் உள்ளவரின் மனது தனது குடும்பத்தினரின் ஆதரவு தனக்கு முழுமையாக உள்ளது என்ற உணர்வை சுமந்துகொண்டு நிம்மதியாக தூங்கும், பித்ரு லோகத்தில் தன்னை அமைதியுடன் வைத்திருக்க தனக்கு செய்ய வேண்டிய கர்மங்களை முறையாக செய்வார்கள் என்ற நம்பிக்கை ஏற்படும். ராம ராம மற்றும் சிவாய நமஹ போன்ற மந்திர அலைகள் - இறக்கும் நபரின் சிந்தனை அலைகளுடன் கலந்து, தியானத்தால் மட்டுமே கிடைக்கும் அமைதி சூழ்நிலையை உருவாக்குகின்றன.

**55)** மந்திர அலைகள், இறக்க உள்ளவரின் உடலில் உள்ள ஐந்து முக்கிய உயிர் சக்திகளான பிராணன், அபானா, உதானா, வியனா போன்ற உயிர் சக்திகளை தட்டி எழுப்பி, வெளியேறும் ஜீவாத்மா, உடலின் நாசித் துவாரங்கள் வழியாக அமைதியாக வெளியேற உதவுகிறது. அவற்றில், பிராணன் சூரியன் என்றும், அபானன் சந்திரன் என்றும் கூறப்படுகிறது.

**56)** உடலைச் சுற்றிக் கொண்டே உள்ள ஜீவாத்மாவுடன் பிராணன்கள் எனப்படும் ஐந்து முக்கிய சக்திகளும் இணைந்து செயல்படுகின்றன; அவை உடலைச் செயல் படுத்த வைக்கும் உயிர் சக்தியாகும்; அதனால்தான் ஜீவாத்மா உடலில் இருந்து வெளியேறும் நேரத்தில் எழுப்பப்படும் மந்திர ஒலிகளை முறையான சப்தத்துடன் எழுப்ப வேண்டியது அவசியம் ஆகும்.

**57)** எதற்காக தெய்வீக பாராயணங்களை ஓத வேண்டும் என்றால் அந்த இடத்தின் சூழ்நிலையை முதலில் தெய்வீகத் தன்மைக் கொண்டதாக மாற்ற வேண்டும் என்பதே. மந்திர உச்சாடனைகளின் தெய்வீக அதிர்வலைகள் மரணம் அடைய உள்ளவர் உள்ள அறையின் வெற்றிடத்தை நிரப்பி விடுகின்றன. தீய கணங்களினால் தெய்வீக மந்திர சக்தி ஒலிகளை தாங்க

முடியாது என்பதினால், தெய்வீக மந்திர ஒலி அலைகள் தீய கணங்களை அங்கிருந்து துரத்தி அடித்து விடுகின்றன.

**58)** சாதாரணமாகவே பல்வேறு தன்மைகளைக் கொண்ட நல்ல மற்றும் தீய கணங்கள் வான் வெளியில் அங்காங்கே சுற்றிக் கொண்டு உள்ளன. வான் வெளியில் சுற்றிக் கொண்டு இருக்கும் தீய கணங்கள் மரணம் அடையும் தறுவாயில் உள்ளவர் அறைக்குள் நுழைந்து மரணம் அடைய உள்ளவரது ஜீவாத்மா வசுக்களின் கட்டுப்பாட்டில் செல்வதற்கு முன் அந்த ஜீவாத்மாவை தம்முடைய கட்டுப்பாட்டில் எடுத்துக் கொண்டு முயலும்.

**59)** உடலில் இருந்து வெளியேறும் ஜீவாத்மாவை தம் கட்டுப்பாட்டில் வைத்துக் கொண்டால், அந்த ஜீவாத்மாக்களுக்கு செய்யப்படும் கர்மாக்களின் பலன்கள் தனக்கும் கிடைக்கும், தமக்கும் நல்ல கதி கிடைக்கும் என அவை நம்புகின்றனவாம். அதே சமயத்தில் அந்த தீய கணங்களினால் தெய்வீக மந்திர சக்தி ஒலிகளை தாங்க முடியாது என்பதினால், தெய்வீக மந்திர ஒலி அலைகள் தீய கணங்களை அங்கிருந்து துரத்தி அடித்து விடுகின்றன.

**60)** மந்திர உச்சாடனைகளின் தெய்வீக அதிர்வலைகள் மரணம் அடைய உள்ளவர் உள்ள அறையின் வெற்றிடத்தை நிரப்பி விடுகின்றன என்பதினால் உடலில் இருந்து வெளியேறும் ஜீவாத்மாவின் மேலுலகப் பயணத்திற்கு முன்பாக அந்த தெய்வீக அதிர்வலைகளில் மூழ்கி மிதக்கிறது என்பதினால் அதற்கு நற்கதி கிடைக்கின்றது என்பது புராணங்கள் மற்றும் சாஸ்திரங்களில் கூறப்பட்டு உள்ள ஆன்மீக கூற்றுக்கள் ஆகும்.

## ஜீவாத்மாவின் பயணம் -4
## இறந்தவர் உடலை எத்தனை மணி நேரத்திற்குள் தகனம் செய்ய வேண்டும்?

**61)** ஒருவர் இறந்து விட்டால் அவர் இறந்த அடுத்த பத்து மணி நேரத்துக்குள் தகனம் செய்து விட வேண்டும் என்பதே சாஸ்திர விதி முறை. அதே சமயம் ஒருவர் மரணம்

அடைந்து விட்டால் மூன்றரை மணி நேரத்துக்கு முன் அவருக்கு தகன காரியங்களை செய்து முடித்து விடக் கூடாது என்பது சாஸ்திர விதியாகும். இரண்டில் எது சரி? இரண்டுமே சரியாகும்.

**62)** ஒருவர் இறந்து விட்டால் அவர் இறந்த அடுத்த பத்து மணி நேரத்துக்குள் தகனம் செய்து விட வேண்டும் என்பதே சாஸ்திர விதி முறை. அதன் ஆன்மீகக் காரணம் பத்து மணி நேரம்வரை அந்த குறிப்பிட்ட ஜீவாத்மாவை சுற்றி உள்ள குறிப்பிட்ட காற்று மண்டலத்துக்குள் வேறு எந்த ஆவிகளாலும் நுழைய முடியாது. பத்து மணி நேரத்துக்கு மேல் ஆகிவிட்டால் அந்த காற்று மண்டலத்தில் சில தீய ஆவிகளால் நுழைய முடியுமாம், இறந்து விட்டவர் உடலில் புகுந்து கொண்டு அவருக்கு செய்யப்படும் கர்மாக்களின் பலனை தாம் அடைய முயலும். அப்படி நடந்து விட்டால் அது குடும்பத்தினரை பாதிப்புகளுக்கு உள்ளாக்கும்

**63)** அதே சமயத்தில் இறந்தவர் உடலை அடுத்த பத்து மணி நேரத்துக்குள் தகனம் செய்து விட வேண்டும் என்கின்ற சாஸ்திர விதி எதற்காக உள்ளது என்பதற்கு விஞ்ஞான ரீதியில் ஒரு காரணம் உள்ளது. பத்து மணி நேரத்துக்கும் அதிகமாக உடலை வைத்திருந்தால் இயற்கையின் விளைவாக அதன் உடலில் தீய கிருமிகள் தோன்ற வாய்ப்பு உள்ளது, அது நோய்களை பரப்பும், அது மட்டும் அல்லாமல் அந்த இடத்தில் நாற்றம் வீசத் துவங்கும் என்பதினால்தான் கர்மாவைத் துவக்க பத்து மணி நேர அவகாசம் மட்டுமே கொடுத்துள்ளார்கள் என்பது விஞ்ஞான அடிப்படையின் ஒரு உண்மையாகும்.

**64)** தகனம் செய்ய பத்து மணி நேரத்துக்கும் அதிகமாகி விட்டது என்ற நிலையில் உள்ளவர்கள் தகனம் செய்யக் கிளம்பும் முன் அந்த சவத்தை பசுவிடம் இருந்து பெறப்படும் ஐந்து புனித திரவியங்களைக் கொண்டு தயாரிக்கும் பஞ்சகவ்யம் எனும் கலவையைக் கொண்ட தண்ணீரால் குளிப்பாட்டி அதன் பின்னரே தகனத்துக்கு எடுத்துச் செல்ல வேண்டும் என்ற விதி இருந்தது. பஞ்சகவ்யம் என்பது பசுவின் சாணம், பசுவின் மூத்திரம், பசுவின் பால், பசுவின் பாலில் எடுத்த நெய், பசுவின் பாலில் செய்த தயிர் – போன்றவற்றைக் கொண்டவற்றைக் கொண்டு தயாரிக்கப்பட்ட கலவை ஆகும்.

**65)** பஞ்சகவ்யம் எனும் கலவையைக் கொண்டு குளிப்பாட்டிய பின்னரே தகனத்துக்கு எடுத்துச் செல்ல வேண்டும் என்று கூறப்பட்டதற்கு ஒரு முக்கியமான காரணம் உள்ளது. விஞ்ஞான ஆராய்வில் பஞ்சகவ்யம் கிருமி நாசினி என்றும், இறந்தவர் உடலில் உள்ள கிருமிகளை அவை நாசம் செய்து விடும் என்றும் கூறுகிறார்கள்.

**66)** பசு என்பது காமதேனுப் பசுவின் சந்ததி என்பதினால் பசுக்கள் தெய்வத்துக்கு சமமானவை., அதன் ஒவ்வொரு பாகத்திலும் ஒவ்வொரு தேவர்கள் அமர்ந்துள்ளனர் என சாஸ்திரங்களில் கூறப்பட்டு உள்ளது.

**67)** பசுவின் மூத்திரத்தில் வருணன் வசிக்கிறார், சாணத்தில் அக்னி வசிக்கிறார், தயிரில் வாயுவும், பாலின் சந்திரனும் மற்றும் நெய்யில் சூரியனும் வசிக்கிறார்கள். அவை அனைத்தையும் ஒன்று சேர்த்து பஞ்சகவ்யம் செய்யப்படும்போது காயத்ரி மந்திரத்தை ஓதி ஒன்று சேர்ப்பார்கள். ஆகவே அத்தனை சக்தி வாய்ந்த பஞ்சகவ்யம் கலந்த நீரைக் கொண்டு சவத்தைக் குளிப்பாட்டும்போது அதில் இருந்து வெளிவரும் அந்தந்த தெய்வங்களின் கணங்கள் அங்குள்ள தீய ஜீவாத்மாக்களை விரட்டி அடிக்கும் என்று சாஸ்திரங்கள் அந்த சடங்கை நியாயப்படுத்தி உள்ளார்கள்.

**68)** உதாரணத்திற்கு இறந்து போனவர்களின் வெளியூர்களில் உள்ள புத்திரன் அல்லது முக்கிய உறவினர்கள் வந்தே ஆக வேண்டும், வெளி ஊர்களில் வசிக்கும் அவர்கள் வந்து சேர இருபது மணி நேரம் ஆகும்; அதற்கு முன் காரியங்களை துவக்கக் கூடாது என்ற நிலையில் அந்த பூத உடலை உரிய மருந்துகள் இட்டு அல்லது ஐஸ் கட்டிகள் மீது பாதுகாப்பாக வைத்திருப்பார்கள். பூச்சிகள், ஈக்களிடம் இருந்து இறந்தவர் உடலைப் பாதுகாக்க கண்ணாடிப் பெட்டியால் மூடி வைத்து இருக்க வேண்டி உள்ளது.

**69)** இன்னொரு உதாரணம். காலை ஆறு மணி அளவில் ஒருவர் மரணம் அடைந்து விட்டாலும் முக்கியமானவர்கள் வந்து சேரும் வரை இறந்தவர் உடலை தகனம் செய்ய முடியாமல் நேரம் நகர்ந்து கொண்டே இருக்கிறது. மாலை ஐந்து மணிக்கு மேல், அல்லது மறுநாள் காலையில்தான்

தகனம் செய்ய முடியும் என்ற நிலைமை. ஒருவர் இறந்து போனதும் அடுத்த பத்து மணி நேரத்துக்குள் கர்மாக்களை துவங்க முடியவில்லை. அது பத்து மணி நேரத்துக்கும் அதிகமாகி விடுகிறது. பத்து மணி நேரத்துக்கு மேல் ஆகி விட்டால் சாஸ்திர நம்பிக்கையின்படி உடலில் இருந்து வெளியேறிய ஜீவாத்மாவை தீய ஜீவாத்மாக்கள் சூழ்ந்து கொள்ளாதா என்ற கேள்வி எழலாம்.

**70)** இப்படி ஒரு இக்கட்டான சூழ்நிலைகளில் காரிய தாமதம் ஏற்பட்டதினால் வரும் தோஷங்களை களைந்து கொண்டு கர்மாக்களை நடத்த சாஸ்திரங்களில் சில பரிகாரங்கள் வைக்கப்பட்டு உள்ளன.

**71)** அப்படி செய்யப்படும் பரிகார சடங்குகளில் தீய சக்திகளை விரட்டும் திறன் கொண்ட சில குறிப்பிட்ட தேவதைகளை மந்திரங்கள் ஓதி அழைக்கிறார்கள். அப்படி ஓதப்படும் மந்திர அழைப்பை ஏற்று அங்கு தோன்றும், அசாதாரண மந்திர சக்திகளைக் கொண்ட அந்த தேவதைகள் ஜீவாத்மாவை வளைத்துக் கொள்ள முயலும் தீய ஆவிகளை அடித்துத் துரத்தி விரட்டுகின்றன.

**72)** ஒருவர் மரணம் அடைந்து விட்ட பத்து மணி நேரத்திற்கு முன்னால் அதே சடங்கை செய்து, அதே மந்திர உச்சாடனைகளை செய்தாலும் கூட, அந்த மந்திர உச்சாடனைகளுக்கு செவி சாய்த்து அந்த தேவதைகள் அங்கு வர முடியாது, காரணம் ஒருவர் மரணம் அடைந்து விட்ட பத்து மணி நேரத்திற்கு பிறகே குறிப்பிட்ட சக்தி தேவதைகளினால் அந்த காற்று மண்டலத்தில் நுழைய முடியும். இந்த செய்திகள் அனைத்துமே சாஸ்திரங்களின் மீதான நம்பிக்கையின் அடிப்படையில் நாம் கேட்டு அறிகின்றோம்.

**73)** ஒருவேளை மரணம் அடைந்தவரது ஜீவாத்மா, சடங்குகளின் கால தாமதத்தினால் தீய ஆவிகளிடம் பிடிபட்டு இருந்தாலும், பரிகார சடங்குகளில் ஓதப்படும் மந்திரங்களின் அதிபதி தேவதைகள் உடனடியாக சென்று தீய ஆவிகளிடம் இருந்து அந்த ஜீவாத்மாவை மீட்டுக் கொண்டு வந்து அந்த ஜீவாத்மா வசுக்கள் கட்டுப்பாட்டில் செல்லும்வரை பாதுகாப்பாக வைத்திருக்குமாம்.

**74)** மூன்றரை மணி நேர கால அவகாசத்திற்கான காரணம் என்ன? ஒருவர் இறந்தப் பின் அவருடைய

ஜீவாத்மா உடனடியாக யம தூதர்களால் கொண்டு செல்லப்படாதாம். ஒருவரது மூச்சு நின்று விட்டதாக சமிக்கை கிடைத்ததும் உடனடியாக யம கணங்கள் பூமிக்கு வந்து விட்டாலும் இறந்தவரது உடலில் இருந்து வெளியேறிய ஜீவாத்மாவை தம்முடைய கட்டுப்பாட்டில் எடுத்துக் கொள்ள அவர்கள் கண் சிமிட்டும் நேர அளவில் காத்திருப்பார்களாம்.

**75)** அதன் காரணம் இறந்தவருடைய வாழ்க்கையின் கால அளவை ஆராய்ந்து பார்க்கும் சித்ரகுப்தரிடம் இருந்து அவர்களுக்கு அந்த ஜீவாத்மாவின் காலம் முடிந்து விட்டது என்ற ஒப்புதல் கிடைக்க கண் சிமிட்டும் நேரம் ஆகுமாம். அவர்களுக்கு கண் சிமிட்டும் நேரம் என்பது பூமியின் கணக்கின்படி மூன்றரை மணி நேரம் என்பதினால்தான் மூன்றரை மணி நேரத்துக்கு முன்னதாக தகன காரியங்களை செய்யத் துவங்கி தகனமும் செய்து முடிக்க மாட்டார்கள்.

**76)** மூன்றரை மணி நேர காலம் முடிந்த பின்னர் அந்த ஜீவாத்மா உண்மையில் இறந்தவர் உடலில் இருந்து வெளியேறி விட்டது என்பதை உறுதி செய்து கொண்ட பின்னர் அந்த ஜீவாத்மாவை முதலில் வசுக்கள், ஏகாதச ருத்திரர்கள் மற்றும் ஆதித்யர் போன்றவர்களின் கட்டுப்பாட்டில் விட்டு விடுவார்கள்.

**77)** யமதூதர்களுக்கு தரப்பட்டு உள்ள மூணரை மணி நேர அவகாசத்திற்கு இன்னும் சில அடிப்படை காரணங்கள் உள்ளன. உலகில் பல்வேறு மலைகள், குகைகள் மற்றும் யாருமே செல்ல முடியாத நதிக் கரைகளில் தவம் செய்யும் பல சாதுக்களும் சன்யாசிகளும், சித்தர்களும், ராஜ ரிஷிகளும், முனிவர்களும், யோகக் கலையை கைக்கொண்ட ஆன்மீகவாதிகளும் சித்திகளைப் பெற மூச்சை நிறுத்தி வைத்துக் கொண்டு சமாதி நிலையில் இருப்பார்களாம். அந்த நேரத்தில் அவர்கள் உடலில் இருந்து தமது ஜீவனை தாமே வான் வெளியில் மிதக்க வைத்து விட்டு தவ நிலையில் இருப்பார்களாம். அந்த நிலையில் அவர்கள் இறந்து விட்டதாகக் கருதி யமகணங்கள் அந்த ஜீவாத்மாவை பிடித்துச் சென்று தவறு இழைத்து விடக் கூடாது என்பதற்காக யமபெருமானின் இந்த நியதி, சாஸ்திர விதிகளில் வைக்கப்பட்டு உள்ளதாம்.

**78)** சில நேரங்களில் இறந்து விட்டதாக கருதப்பட்டு தகனத்துக்கு எடுத்துச் செல்லப்பட்ட சவங்கள் நடு வழியில் உயிர் பிழைத்து எழுந்தான உண்மைக் செய்திகள் உள்ளன. அது போல மருத்துவர்கள் நின்று போன மூச்சை உடனடியாக செயற்கை ஸ்வாசம் செலுத்தி மீண்டும் உயிர் பிழைக்க வைத்த சம்பவங்களும் நிறையவே உள்ளன. ஆனால் குறிப்பிட்ட சில நிமிடங்களுக்குள், அவர்கள் உடல் நிலையின் ஒத்துழைப்பைப் பொறுத்து அதை செய்ய வேண்டி இருந்தது.

**79)** மரணம் அடைந்தவரின் தகனத்தை துவக்கும் முன், மரணம் அடைந்த கால நேரத்தைக் கணக்கிட்டு சில சடங்குகள் செய்யப்படுகின்றன. ஒருவர் தக்ஷிணாயனத்தில், க்ருஷ்ண பக்ஷத்தில், இரவில் இறந்தால் அந்த தோஷங்களுக்கு நிவர்த்தி கிடைக்க ஒவ்வொன்றுக்கும் அதற்கென தரப்பட்டு உள்ள குறிப்பிட்ட ஹோமங்களை செய்தாக வேண்டும். அதற்கான பரிகார ஹோமம் என்பது என்ன என்பதை வீட்டு ப்ரோஹிதர் கூறுவார் ஒருவர் உத்திராயணத்தில், சுக்ல பக்ஷத்தில், பகலில் இறந்தால் பரிகார ஹோமம் கிடையாது.

**80)** பூரட்டாதி, உத்திரட்டாதி போன்ற நக்ஷத்திரங்களில் இறந்தால் பூமி தானம் செய்யவேண்டும்.

**81)** புனர்பூசம், விசாகம், பூரட்டாதி போன்ற நக்ஷத்திரங்களில் இறந்தால் ஹிரண்யதானம் செய்யவேண்டும்.

**82)** பூமி தானம், ஹிரண்ய தானங்கள் போன்றவை இந்த காலங்களில் அனைவராலும் செய்யக் கூடிய காரியம் இல்லை என்பதினால், அதற்கு பதில் புரோகிதர்களுக்கு தட்க்ஷிணை பணம் தந்து விடுகின்றார்கள்.

**83)** செவ்வாய், வியாழன், வெள்ளிகளில் இறந்தால் அந்தந்த க்ரஹத்திற்கு உகந்தவற்றை தானம் செய்யவேண்டும். இவற்றை அந்தந்த வீட்டு புரோகிதர்களை கலந்து ஆலோசனை செய்து செய்ய வேண்டும்.

**84)** ஒருவர் இறந்த 6 மணி நேரத்திற்கு பிறகு உடலை தஹனம் செய்ய வேண்டுமானால் பர்யுஷித ஹோமம் என்பதை செய்ய வேண்டும். ஆனால் இறந்த 4 மணி நேரத்திற்குள் (3.30 மணிக்குப் பிறகு, ஆனால் 4.00 மணிக்கு

முன்) உடலை தஹனம் செய்தால் பர்யுஷித ஹோமம் செய்யத் தேவையில்லை.

**85)** பர்யுஷிதம் என்றால் பழையதானது என்பது பொருள். இதன் தாத்பர்யம் என்ன என்றால் இறந்தவர்களை ஆறு மணி நேரத்துக்குள் தகனம் செய்யவில்லை என்றால் அந்த உடல் பழையதாகி விட்ட உடல் என்ற ஆன்மீக நிலையை அடைந்து விடுமாம்.

**86)** சாஸ்திரங்களில் அறிவுறுத்தப்பட்டு உள்ளது என்ன என்றால் மூன்று அல்லது நான்கு மணி நேரத்திற்குள் தகன காரியங்களை செய்யத் துவங்கி அக்கினிக்கு சமர்ப்பணம் செய்து விட வேண்டும் (தகனம்). எப்படி நாம் ஹோமத்திற்கென்றே சில மணி நேரங்களுக்கு முன்னர் சமைத்து இருந்த உணவை ஹோமங்களில் அக்னிக்கு சமர்ப்பித்து விடுகின்றோமோ, அதை போலவேதான் மரணம் அடைந்து விட்டவர் சடலத்தையும் வெகு நேரம் வைத்திருக்காமல் சில மணி நேரங்களிலேயே அக்னிக்கு கொடுத்து விட வேண்டும். ஆறின கஞ்சி பழைய கஞ்சி என்பதை போல பழதாகி விட்ட அதாவது மரித்து பல மணி நேரம் ஆகி விட்ட சரீரத்தையும் அக்கினிக்கு கொடுக்கலாகாது என்று சாஸ்திரங்கள் கூறுகின்றனவாம்.

## ஜீவாத்மாவின் பயணம் -5
## இறுதிக் கிரியைகளை யார் செய்வார்கள்?

**87)** உடலுக்கு செய்யும் இறுதிக் கிரியைகள் இரண்டு வகைப்படும். ஒன்று சுபகிரியை மற்றது அபரக்கிரியை. இறந்த பின் ஒருவருக்கு செய்யப்படும் சடங்குகள் (இறுதிக் காரியங்கள்) அனைத்துமே அபரக்கிரியை என அழைக்கப்படுகின்றது.

**88)** இறந்தவர்களது இறுதிக் கிரியைகளை யார் செய்ய வேண்டும் என்பதற்கு சில விதி முறைகள் உள்ளன. மரணம் அடைந்து விட்டவரின் நெருங்கிய இரத்த உறவினர்கள்

மட்டுமே இறுதிக் கிரியைகளை செய்ய உரிமை கொண்டவர்கள்.

**89)** குடும்பங்களில் இறந்து விட்ட தந்தைக்கு மூத்த மகனே காரியங்களை (கொள்ளி போடுவது) செய்ய உரிமைப்பட்டவர் ஆவார். குடும்பத்தில் மூத்த மகன் ஏற்கனவே இறந்து விட்டார் என்றால் அவருக்கு அடுத்த மகன் தந்தைக்கு சடங்குகளை செய்ய உரிமைப்பட்டவர் ஆகி விடுவார். அவரும் மரணம் அடைந்து விட்டவர் என்றால் அடுத்தவர், அதற்கு அடுத்தவர் என்று பட்டியல் நீளும்.

**90)** குடும்பங்களில் இறந்து விட்ட தாயாரின் இறுதிச் சடங்குகளை (கொள்ளி போடுவது) செய்ய உரிமைப்பட்டவர் இளைய மகன் ஆவார். இயற்கையாகவே மூத்த மகன் மீது தந்தைக்கும், இளைய மகன் மீது தாயாருக்கும் அதிக பாசம் உள்ளது என்பதினால் இந்த வழக்கம் உள்ளதாக கூறப்படுகின்றது. ஆனாலும் அவரவர் குடும்ப பழக்கங்களின்படி அவரவர் குடும்ப புரோஹிதர்கள் கூறுவது போல மூத்தவரோ அல்லது இளையவரோ இறுதி காரியங்களை செய்வார்கள்.

**91)** மரணம் அடைந்து விட்டவர்களுக்கு ஈமக்கிரியைகள் செய்ய மகன்கள் யாருமே இல்லாத நிலையில் (இறந்து விட்டார்கள் அல்லது மகன்கள் பிறக்கவில்லை என்பது அர்த்தம்) இறந்து விட்ட மகன்களின் மகன்கள், இறந்து விட்ட மகன்களின் மகன்கள் (பேரன்கள்), தத்து பிள்ளை, தத்து பிள்ளையின் மகன்கள், தத்து பிள்ளையின் பேரன், சொத்தை அடைய உள்ள பெண் வயிற்று பேரன், மாப்பிள்ளை, உடன் பிறந்த மூத்த சகோதரன் அல்லது இளைய சகோதரன் அல்லது அவர்களின் புதல்வர்கள் அல்லது சக்களத்தி இருந்தால் அவளது மகன்கள்; நண்பர்கள் மற்றும் வீட்டில் வேலை செய்யும் பிராமண வேலைக்காரன் என்பவர்கள் இறுதிக் கடன்களை செய்யலாம் என சாஸ்திரங்களில் பட்டியல் நீளுகிறது.

**92)** அவர்களும் இல்லை என்றால், அல்லது அவர்கள் இருந்தும் குடும்ப பிரச்சனைகள் காரணமாக சடங்குகளை செய்ய மறுத்து விட்டால், இறந்தவர்களது மனைவியின் கையால் தர்ப்பைப் புல்லை வாங்கி பங்காளி உறவினர்கள் கர்மாவை செய்யலாம்.

**93)** மகன்கள் இல்லாத தாயார்கள் இறந்தால் அவர்களுக்கான கர்மங்களை அவர்களுடைய கணவர்களே செய்ய வேண்டும்.

**94)** மரணம் அடைந்து விட்டவர்களுக்கு ஈமக்கிரியைகள் செய்ய கீழுள்ள பட்டியல் இந்து மதத்திலேயே சமூகத்திற்கு சமூகம் மாறுபட்டு உள்ளது

**95)** சில சந்தர்பங்களில் மகன்கள் யாருமே இல்லை எனில், மூத்த பெண்ணின் கணவரும் ஈமக் கிரியைகளை செய்யலாம். ஆனால் அவரது தந்தை உயிரோடு இருந்தால் அவராலும் அதை செய்ய முடியாது.

**96)** அதற்கு சாஸ்திர விதிகள் இடம் தரவில்லை என்பதினால் தற்காலத்தில் சில வீடுகளில் அந்த வீட்டின் பெண்கள் கூட கிரியைகளை செய்யத் துவங்கி உள்ளார்கள்.

**97)** பெண்கள் இறுதிக் கிரியைகள் செய்யக் கூடாது என்று எந்த நூலிலும் குறிப்பிடவில்லை. ஆனால் சாஸ்திரப்படி பெண்கள் தங்களின் பெற்றோர்களுக்கு இறுதி சடங்கு, காரியம் செய்ய முழு உரிமை உண்டு. தர்ம சாஸ்திரத்திலும் ஆண் பெண் எனும் பாகுபாடு கூறப்படவில்லை. ஆனால் திருமணம் ஆகி புகுந்த வீட்டிற்கு சென்று விட்ட பெண்களால் தனது பெற்றோர்களுக்கு ஈமக் கிரியைகளை செய்ய முடியாது. அதற்கு சாஸ்திரங்கள் இடம் கொடுக்கவில்லை.

**98)** இறுதிக் கிரியைகளை பெண்கள் செய்யக் கூடாது என்பது ஒரு நடைமுறை வழக்கமாகவே இருந்து வந்துள்ளது என்பதினால் இதில் நாம் கருத்து கூற விரும்பவில்லை.

**99)** ஒருவேளை மரணம் அடைந்தவர்களுக்கு யாருமே இல்லாத அல்லது செய்ய மனம் இல்லாத உறவினர்கள் இருந்தால் கர்மாக்களை புரோகிதரே செய்து கொடுக்கலாம்.

**100)** அப்படிப்பட்ட நிலையில் அதற்கென சில சடங்குகளை புரோகிதர்கள் சொல்வதை போலவே செய்த பின்னரே இறுதிக் காரியங்களை செய்ய வேண்டும் என்பதாக சாஸ்திர விதி முறைகள் உள்ளன. ஆனால் இப்படிப்பட்ட நிகழ்வுகள் எல்லாம் அபூர்வமாகவே நடைபெறுகின்றன.

**101)** தன் பெற்றோர்களின் விருப்பமில்லாமல் அவர்களுக்கு மன வேதனை அளித்து, தனக்கு பிடித்தவளுடன் வாழ்ந்து கொண்டு ஒரு புதல்வனையும் பெற்று விட்ட மகனுக்கு அவனுடைய பெற்றோர்களுக்கு கர்ம காரியங்களை செய்யும் உரிமை கிடையாது என்பதாக கருட புராணம் கூறுகின்றது. அதையே சாஸ்திரங்களும் வலியுறுத்துகின்றன.

**102)** இறந்தவருடைய குடும்பத்தில் அவர்களுக்கு கர்மாக்களை செய்ய ஒருவரும் இல்லை, அவர்கள் அனாதை என்றால் அந்த ஜீவாத்மாக்கள் யமலோகத்தில் பாவ புண்ணியங்களுக்கு ஏற்ப தண்டனை அனுபவித்தப் பின்னர் யம தர்மரின் எமகணங்களில் ஒருவராகி விடுகிறார்களாம். அதனால் பல அனாதை ஆசிரமங்கள் அவர்களுக்கு ஈமக்கிரியைகள் செய்கின்றார்கள்.

## ஜீவாத்மாவின் பயணம் -6
## தகனம் செய்ய கிளம்பும் வீட்டில் செய்யப்படும் சடங்குகள்

**103)** இறந்தவர்களுக்கு செய்ய வேண்டிய பொதுவான கர்மாக்களை அந்த குடும்பத்தினரின் சம்பிரதாயத்துக்கு ஏற்ப புரோஹிதர்கள் விவரமாகக் கூறுவார்கள். ஒவ்வொரு கோத்திரங்களுக்கும், ஒவ்வொரு கோத்திரங்களைக் கொண்டவர்களுக்கும் தனித்தனி சடங்கு முறைகள் மற்றும் மந்திரங்கள் உண்டு என்பதினால் அவற்றை இங்கு தனித்தனியே விவரிக்காமல் பொதுவாக கடைபிடிக்கப்படும் சடங்குகளை மட்டும் விவரித்து உள்ளேன்.

**104)** ஆகாயத்தில் தோன்றியதாக கூறப்படும் தர்பைப் புல்லின் அடிப் பகுதியில் பிரும்மாவும், நடுப் பகுதியில் திருமாலும், நுனிப் பகுதியில் சிவபெருமானும் வசிப்பதாக சாஸ்திரங்களில் கூறப்பட்டு உள்ளதினால் தர்பை புல் புனிதமானதாக கருதப்படுகிறது. அது வெற்றிடத்தில் சுற்றித் திரியும் தீய சக்திகளை நீக்கும் தன்மை கொண்டது, இறந்தவர்களின் சடலத்தில் இருந்து வெளிப்படும் கிருமிகளையும் அழித்து விடும் என்று நம்பப்படுவதினால்

இறந்தவரது சடலத்தை தர்பை புல் மீது படுத்த நிலையில் வைத்து விடுவார்கள்.

**105)** தெற்கு திசையில் யமதர்மராஜர் அமர்ந்து இருப்பதினால், இறந்து போனவருடைய சடலத்தின் தலையை தெற்கு நோக்கி படுக்க வைப்பது ஐதீகம் ஆகும். பிணத்தின் தலையை தெற்கு பகுதியை நோக்கி வைப்பதின் முக்கியமான காரணம், மரணம் அடைந்தவரின் ஜீவாத்மா யமலோகத்திற்கு போகும் முன்னால், தனக்கு அருள் புரியுமாறு யமதர்மராஜனை வேண்டிக் கொண்டு அவரை சாஷ்டாங்கமாக நமஸ்கரிக்க வேண்டும் என்பதான ஐதீகம் உள்ளது. அப்போதுதான் அவரை அழைத்துச் செல்லும் எம கிங்கர்கள் அந்த ஜீவாத்மாவை அதிக துன்பங்களுக்கு உட்படுத்தாமல் அழைத்துச் செல்வார்களாம்.

**106)** வீட்டில் பூஜை அறை தனியாக இருந்தால் அங்குள்ள ஸ்வாமி விளக்கை அணைத்து விட்டு அறையை மூடி வைத்து விடுவார்கள். அதை பன்னிரண்டு நாட்கள் காரியங்கள் முடியும்வரை திறக்க மாட்டார்கள்.

**107)** பல வீடுகளில் பூஜை அறை என்பது தனியாக இருக்காது. ஏதாவது ஒரு அறையில் அல்லது மூலையில் சுவற்றில் ஆணி அடித்து தெய்வங்களை மாட்டி வைத்து இருப்பார்கள். பொதுவாக தினமும் அந்த தெய்வங்களுக்கு முன்னால் விளக்கு ஏற்றி வைப்பார்கள். குடும்பத்தில் ஒருவர் இறந்து விட்டால் அடுத்த பன்னிரண்டு நாட்களும் அந்த விளக்கை ஏற்றக் கூடாது என்பது சாஸ்திரம்.

**108)** வீட்டில் அனைவரும் நலமாக உள்ள நேரத்தில் குடும்ப மகிழ்ச்சி மற்றும் மன அமைதிக்காக தெய்வங்களுக்கு முன்னால் ஏற்றப்படும் எண்ணை அல்லது நெய் தீப விளக்கின் மூலம் தெய்வங்களை நமது வீட்டிற்கு அழைத்து அருள் புரிய வேண்டும் என்று மானசீகமாக வேண்டுகோள் விடுகிறோம். வீட்டில் விளக்கு ஏற்றி வைத்து வைத்து தம்மை ஆராதிக்கும் பக்தர்களுக்கு அருள் செய்ய அந்த விளக்கு ஒளி மூலம் தெய்வங்களே பல சமயங்களில் நம்மை அறியாமல் வீட்டுக்குள் வந்து போகுமாம். ஆனால் மரணம் அடைந்த ஜீவன் உலவும் இடத்தில், அதனுடன் சேர்ந்து வேறு பல தீய ஜீவாத்மாக்களும் உலவும்

என்பதினால் அந்த நேரத்தில் எந்த தெய்வங்களும் வீட்டிற்குள் நுழையாதாம்.

**109)** மரணம் அடைந்து விட்டவர் வீட்டில் விளக்கேற்றி வைத்து மந்திரங்களை உச்சரித்து தெய்வத்தை வேண்டும் போது, அங்கு சுற்றித் திரியும் தீய ஜீவாத்மாக்கள் வேண்டும் என்றே மந்திர உச்சாடனைகள் செய்பவரின் எண்ணத்தில் புகுந்து மந்திர உச்சாடனைகளை தவறாக உச்சரிக்க வைக்குமாம். அப்படி தவறாக உச்சரிக்கப்படும் மந்திரங்களினால் உச்சாடனம் செய்பவர்களுக்கு வாழ்க்கையில் பல துன்பங்கள் வந்து சேரும். அதனால்தான் இறந்தவர்கள் வீட்டில் தீட்டு காலம் எனப்படும் முதல் பன்னிரண்டு நாட்களிலும் தெய்வங்களுக்கு முன் எண்ணை அல்லது நெய் தீப விளக்கேற்றி தெய்வங்களை வழிபடுவது ஆன்மீக ரீதியில் தடுக்கப்பட்டு உள்ளது. மன இருள் இல்லாமல் பூரண பக்தியோடு செய்ய வேண்டிய தெய்வ காரியம் எதையுமே துயரத்துடன் செய்யக் கூடாது என்பதினால் இந்த நியதி வைக்கப்பட்டு உள்ளது.

**110)** அடுத்து இறந்து போனவர் அறையில் தெற்குப் பகுதியில் ஒரு சின்ன எண்ணெய் விளக்கை விளக்கை அந்த பனிரண்டு நாட்களும் அணையாதபடி இருக்குமாறு ஏற்றி வைத்திருக்க வேண்டும் என்ற நியதி உள்ளது. அதை எம தீபம் என்று கூறுவார்கள்.

**111)** அடுத்த பன்னிரண்டு நாட்களும் யம தர்மனின் ஆதிக்கத்தில் உள்ள அந்த வீட்டில் யம தர்ம தேவருக்கு மட்டுமே முக்கியத்துவம் கொடுக்க வேண்டும் என்பதற்காக செய்யப்படும் நியதி அதுவாகும். தனது பாவங்களை மன்னித்து, தன்னை அழைத்துச் செல்ல வரும் யம கணங்கள் தன்னை துன்புறுத்தாமல் நல்ல முறையில் அழைத்துச் செல்ல வேண்டும் என்பதற்காக அந்த வீட்டில் சுற்றிக் கொண்டு இருக்கும் ஜீவாத்மா யம தேவனை ஆராதித்துக் கொண்டு இருக்க வேண்டும் என்பதற்காக அந்த திசையில் எண்ணெய் விளக்கு ஏற்றி வைக்க வேண்டும்.

**112)** உடலில் இருந்து வெளியேறிய ஜீவாத்மாவானது வசுக்கள், ருத்திரர்கள் மற்றும்

ஆதித்யர்களின் தீவிரமான கண்காப்பில் இருந்தாலும், அந்த வீட்டில் சுற்றிக் கொண்டே இருக்கும். உயிருடன் இருந்த நாட்களில் தான் வாழ்ந்திருந்த அறையில் அடுத்த பன்னிரண்டு நாட்களும் சுதந்திரமாக சுற்றிக் கொண்டு இருக்கும் ஜீவாத்மாவானது இருட்டில் தட்டுத் தடுமாறிக் கொண்டு இருக்கக் கூடாது என்பதினால் மரணம் அடைந்தவர் அறையில் விளக்கை ஏற்றி வைப்பதற்கு ஆன்மீக ரீதியாக கூறப்படும் இன்னொரு காரணம் ஆகும்.

**113)** இறந்து போனவர் உடலில் போடப்பட்டு உள்ள துணிகளை அகற்றி விட்டு வெள்ளைப் போர்வையினால் உடலைப் போர்த்தி வைக்க வேண்டும். பிரேதத்தை மூட வாங்கிய துணியிலேயே கொஞ்சம் கிழித்து வைத்து கொண்டு அதையே பத்து நாளும் வஸ்த்ரோதகம் விட உபயோகிக்க வேண்டும். வஸ்த்ரோதகம் என்பதற்கான சரியான விளக்கம் தெரியவில்லை.

**114)** அந்தணர்கள் அல்லாத சில குடும்பங்களில் இறந்தவரின் உடல் வைக்கப்பட்டுள்ள இடத்திற்கு மேல் வெள்ளை துணியைக் கட்டி வைப்பார்கள். உடலை விட்டுப் வெளியேறும் ஜீவாத்மா அந்த உடல் மயானத்திற்கு எடுத்துச் செல்லும்வரை அந்த வெள்ளைத் துணியில் தொங்கிக் கொண்டு நிற்கும் என்ற ஐதீகமே அதன் காரணம்.

**115)** கறுப்பு நிறம் யமதர்மருக்கு உகந்த நிறம் என்பதினால், மரணம் அடைந்தவர் உடலை விட்டு வெளியேறும் ஜீவாத்மா மனதில் யம பயத்தை ஏற்படுத்திக் கொள்ளும் என்பதினால் இறந்தவர் உடலுக்கு வெள்ளை துணி போர்த்தப்படுகின்றது என்பது ஆன்றோர் கூற்றாக உள்ளது.

**116)** இறந்து விட்டவர் சிறு பெண்ணாக இருந்தால், வெள்ளைத் தவிர மற்ற நிறத்தில் மேலாடை அல்லது உடலை மறைக்கும் வகையிலான வஸ்திரத்தை அணிவிக்க வேண்டும்.

**117)** இறந்து விட்டவர் சுமங்கலியாக இருந்தால் குங்கும பொட்டு வைத்து அலங்கரித்து புது பச்சைப் புடவையை அணிவிப்பார்கள். அதே போல பச்சை கண்ணாடி வளையல்களையும் தலையில் பூவையும் வைத்து விடுவார்கள்.

**118)** அங்கு கூடி இருக்கும் சுமங்கலி பெண்கள் இறந்த பெண்மணியின் நெற்றியில் மஞ்சள் திலகம் இட்டு, சிவப்பு குங்குமம் இடுவார்கள். இறந்து விட்ட சுமங்கலி பெண்ணின் நெற்றியில் மஞ்சள் மற்றும் குங்குமம் இடுவது இந்து இறுதிச் சடங்கில் ஒன்றாகும், அதன் மூலம் இறந்து விட்ட சுமங்கலி பெண்ணிற்கு மரியாதை காட்டப்படுகின்றதான ஐதீகம் உள்ளது. அவரது கணவர் இன்னும் உயிருடன் இருப்பதை வெளிப்படுத்துகின்றது.

**119)** இறந்து போனவர் விதவைகள் என்றால், அவர் உடல் மீது வெள்ளை துணி போர்த்தி, நெற்றியில் வீபூதியை இடுவார்கள்.

**120)** பொதுவாக அனைவரது வீடுகளிலும் இறந்தவர் நெற்றியில் வீபுதி பூசி வைப்பார்கள். அதன் மூலம் இறந்த பின் ஒருவர் சாம்பல் ஆகி விடுகிறார்கள் என்ற தத்துவத்தை வெளிப்படுத்துகிறார்கள்

**121)** இரு கை கட்டை விரல்களையும், இரு கால் கட்டை விரல்களையும் சேர்த்து சின்ன துணியினால் கட்டி வைத்து வைப்பார்கள். மூக்கின் இரண்டு நாசி துவாரங்களிலும் பஞ்சை வைத்து மூடி விடுவார்கள். கண்களையும் மூடி விடுவார்கள். அதிக நேரத்திற்கு பின் அவற்றை செய்வது கடினம், ஏன் எனில் உடல் விறைத்துக் கொண்டு விடும்.

**122)** குறிப்பிட்ட ஒரு சில சமூகத்தினர் இறந்த பிணத்திற்கு எட்டு இடங்களில் கட்டு போடுவார்கள். அதாவது இரண்டு கை பெரு விரல்களையும் இணைத்துக் கட்டுவதை கைக் கட்டு என்பார்கள். காலிலுள்ள பெரு விரல்களை இணைத்துக் கட்டுவதை கால்கட்டு என்றும், சீவலுடன் வெற்றிலையை கசக்கி வாயில் வைத்து வாயை துணியால் மூடுவதை வாய்க்கட்டு என்று கூறுவார்கள், தளர்ந்து வரும் தசைப் பிண்டங்களை வாயுடன் ஒருங்கிணைத்துக் கட்டுவதை நாடிக் கட்டு என்றும், தொப்புள் வழியாகக் காற்று புகுந்து வயிறு புடைத்து விடாமல் கட்டுவது தொப்புள் கட்டு என்றும், தலை முடியை மறைத்து முகம் மட்டும் தெரியும்படியாகக் கட்டுவதை தலைக் கட்டு என்றும், முழங்கால் இரண்டையும் இணைத்து உடல் நேர் கோட்டில் அமையும்படி கட்டுவது முழங்கால் கட்டு என்றும் ஆண்களின் பிறப்புறுப்பை மறைத்துக் கட்டுவதை கோவணக் கட்டு என்றும் கூறி அவற்றை

செய்வதுண்டு. இவற்றை மரணம் அடைந்து விட்ட பெண்களுக்கும் செய்கின்றார்கள்.

**123)** எதற்காக கை மற்றும் காலில் உள்ள கட்டை விரல்களை ஒன்று சேர்த்துக் கட்டி வைக்கிறார்கள் என்பதை சாஸ்திரங்கள் விவரிக்காவிடிலும் அதை தர்ம சாஸ்திர விதியாக கூறி உள்ளார்கள்.

**124)** ஒருவர் இறந்தப் பின் அவர்கள் உடலில் உள்ள ஜீவாத்மா பன்னிரண்டு நாட்கள் அவை தங்கி இருந்த வீட்டிலேயே சுற்றிக் கொண்டு இருக்கும். அதே போல வான் வெளியில் சுற்றித் திரியும் பிறரது ஜீவாத்மாக்களும் எங்கெல்லாம் ஒருவர் இறந்து விடுகின்றாரோ அங்கெல்லாம் சென்று அங்கு இறந்தவரின் வீட்டிலேயே ஜீவாத்மாவோடு சேர்ந்து கொண்டு சுற்றித் திரிய முனையும்.

**125)** ஒருவர் இறந்தப் பின் இயற்கையாகவே அவரது கால்கள் இரண்டும் அகலமாக திறந்து கொண்டு ஒன்றை விட்டு ஒன்று விலகி நிற்கத் துவங்கும். அப்படி கால்கள் விலகி நிற்கும்போது பின்புறத்தில் உள்ள ஆசனவாயின் துவாரம் விரிவடைந்து விடும். அதையே மூலாதாரம் என்பார்கள். அதன் வழியே இறந்தவர் உடலில் இருந்து வெளியேறிய ஜீவாத்மாவும், அதோடு ஒட்டிக் கொண்டு வந்து விடும் ஜீவாத்மாக்களும் சடலத்தின் உடலுக்குள் நுழைந்து கொண்டு விடும். அப்படி அவை நுழைந்து விட்டால் அந்த உடலுக்கு செய்யப்படும் சடங்குகளின் பலன் அந்த சடலத்தில் இருந்து வெளியேறிய ஜீவாத்மாவிற்கு முழுமையாக கிடைக்காமல் அதோடு உடலின் உள்ளே புகுந்து கொள்ளும் மற்ற ஜீவாத்மாக்களுக்கு போய் சேர்ந்து விடும்.

**126)** அது மட்டும் அல்ல, அந்த உடலை தகனம் செய்யும்போது அந்த ஜீவாத்மாக்கள் ஆசனவாயு பகுதியில் இருந்து வெளியில் வந்து மயானத்தில் சுற்றித் திரியத் துவங்கும். மயானத்தில் அதற்காகவே காத்திருக்கும் மந்திரவாதிகள் சடலத்தில் இருந்து வெளி வரும் ஜீவாத்மாக்களை தன் வயப்படுத்தி விடுவார்கள். அவற்றை மந்திர தந்திர வித்தைகளுக்கு பயன்படுத்தி துஷ்பிரயோகம் செய்வார்கள். அது தகனம் செய்யப்பட்ட உடலின் குடும்பங்களை பாதிக்கும். ஆகவேதான் இறந்து

கிடைக்கும் உடலின் மூலாதார துவாரம் மூடப்பட்டு இருக்க வேண்டும் என்பதற்காக கட்டை விரல்களை இறுக்க கட்டி வைத்து விடுவார்கள்.

**127)** ஜீவாத்மாக்களினால் இறந்து விட்டவர்களின் உடலில் உள்ள மற்ற துவாரங்கள் வழியே உள்ளே நுழைய முடியாதாம். நாசித் துவாரம் அல்லது மூலாதாரம் வழியே மட்டுமே நுழைய இயலுமாம். அதனால்தான் நாசியின் துவாரங்களை பஞ்சு வைத்து மூடியும், கால் கட்டை விரல்களை ஒன்றாக சேர்த்துக் கட்டி வைத்து விடுவார்கள்.

**128)** உறவினர் அனைவரும் வந்து கூடிய பின், தகனக் கிரியை அல்லது கர்மாவை செய்யத் துவங்கும் புரோஹிதர் பொதுவாக தலைப் பகுதியில் செங்கல்லை அடுக்கி வைத்து சின்ன குண்டம் அமைத்து, அதன் பக்கத்தில் கும்பங்கள் வைத்து கும்ப பூஜைகளைத் துவக்குவார். கிரியைகள் செய்வதற்கு முன் கும்பங்கள் வைத்து கும்ப பூஜைகள் ஆரம்பமானதும், பூதவுடலை ஒரு பூணூல் மூலம் கும்பங்களுடன் இணைத்து வைத்து ஹோம குண்ட அக்கினியுடன் சங்கமிக்கச் செய்வார்கள். கும்ப பூசைகள் நிறைவு பெற்றதும் அக்கினி ஹோமம் வளர்க்கப்படுகின்றது.

**129)** தலைப் பகுதியில் சடங்குகளை செய்ய துவங்குவதின் காரணமும் யமதர்மராஜருக்கு மரியாதை தருவதற்காகத்தான். அதாவது இறந்தவர் உடலில் இருந்து வெளியேறிய ஜீவாத்மாவை அக்னி ஹோமத்தின் மூலம் வீட்டிற்குள்ளேயே தகனம் செய்து யமதர்ம தேவரிடம் அனுப்பி வைப்பதான ஐதீகம் அது.

**130)** அந்த சடங்கு முடிந்ததும் அக்கினி ஹோமம் வளர்க்கப்பட்டு பூத உடலை தண்ணீர் விட்டு அலம்புவார்கள். அந்த சடங்குகளை வீட்டில் உள்ளவர்கள் செய்கிறார்கள். அதை தெய்வீக நிலையை அடைய உள்ள உடலுக்கு செய்யும் முதல் அபிஷேக பூஜை என்பார்கள்.

**131)** அதற்கு இடையில் அங்கு அஞ்சலி செலுத்த வருபவர்கள் வீட்டில் வைக்கப்பட்டு உள்ள சடலத்திற்கு மலர் மாலைகளை அணிவிப்பார்கள். பூக்களையும் உடல் மீது தூவுவார்கள். எதற்காக இறந்தவர் உடலின் மீது மலர்களை போட வேண்டும் அல்லது, மலர் மாலைகளை

வைக்க வேண்டும் என்பதற்கு சாஸ்திர நியதி இல்லை. தர்ம சாஸ்திர நம்பிக்கையின்படி இறந்தவர் தெய்வமாகி விட்டார் எனக் கருதுவதினால்தான் அதை செய்கிறார்கள்.

**132)** இறந்து போனவர் ஆணாக இருந்தாலும் சரி, பெண்ணாக இருந்தாலும் சரி அவர்களுக்குப் பிறந்த பெண்கள் மற்றும் மருமகள்கள் (பிள்ளைகளின் மனைவிகள்) போன்றவர்கள் தாம் உடுத்திய புடவையுடன் தலைக்கு ஸ்நானம் செய்து விட்டு, தலையை முடியாமல், ஈரப் புடவையுடன் குடத்தில் தண்ணீர் ஏந்திக் கொண்டு வந்து ஆளுக்கொரு குடமாக அல்லது ஒரு குட ஜலத்தையே எல்லோரும் பிடித்துக் கொண்டோ சடலத்தின் கால் பாதத்தில் இருந்து தலை வரை உடம்பு முழுவதும் நன்றாக நனையும்படி தண்ணீர் விடுவார்கள்.

**133)** அதன் பின்னர் கர்மாவை செய்பவர் சடலத்தில் தலையில் சீக்காய் பொடி, எண்ணெய் முதலியவற்றை வைப்பார்கள். பின்னர் அரிசி மாவை ஒரு பாத்திரத்தில் நீரில் கரைத்து அபிஷேகம் செய்வார்கள். இந்த பழக்கமும் சமுதாயத்திற்கு சமுதாயம் மாறுபடும். சில வீடுகளில் மஞ்சள் கரைத்தும் அபிஷேகம் செய்வது உண்டு. அதன் பின் பால், தயிர், இளநீர் முதலியவற்றால் அபிஷேகம் செய்வார்கள். கர்மாவை செய்பவர் மேற்கு முகமாக நின்றபடி சடலத்தின் கால் பகுதியில் இருந்து துவங்கி தலைவரை அவரின் புறங்கையினால் வேறு ஒருவர் உதவியுடன் இந்த அபிஷேகம் செய்வார். பூதவுடல் பழுதடைந்த அல்லது அபிஷேகம் செய்ய முடியாத நிலையில் இருந்தால் அபிஷேகத் திரவியங்களை பூதவுடல் மீது தெளித்து விடுவார்கள். பொதுவாக அந்தணர்கள் வீடுகளில் இவற்றை செய்யாமல் கங்கை நீர் கொண்டு அபிஷேகம் செய்வார்கள்.

**134)** உடல் முழுவதும் தண்ணீர் ஊற்றி உடலை நனைத்தப் பின், முடிவாக முகத்தில் தண்ணீரை ஊற்றியதும் தலை அருகே குடத்தைக் கவிழ்த்து வைத்து விட்டு அதில் இருந்து கீழே வடிந்த ஜலத்தை எடுத்து அதே குடத்தின் மீது தெளித்தப் பின் அந்தக் குடத்தை எடுத்து சடலத்தின் வடக்குப் பக்கத்தில் வைத்து விடுவார்கள். அப்படி செய்வது கங்கை நீரால் அந்த

குடத்தை அலம்பியதற்கு சமம் என்பார்கள். இறந்தவர்கள் தெய்வத்துக்கு சமமானவர்கள் எனக் கருதப்படுவதினால் அந்த சடங்கை சில புரோஹிதர்கள் ஒரு விதத்தில் அஸ்வமேத யாகத்துக்கு இணையானது என்று கூறி உள்ளார்கள்.

**135)** அதன் பின் இறந்தவரது கர்த்தாக்கள் அனைவரும் சடலத்தை பிரதர்ஷணம் செய்த பின் அந்த இடத்தில் இருந்து வெளியில் சென்று விடுவார்கள். செல்லும் முன் அதற்கு நமஸ்கரிப்பது மெத்த சிறந்தது ஆகும். அங்குள்ள மற்றவர்கள் அந்த இடத்தை ஈரமின்றி நன்றாகத் துடைத்து விடுவார்கள்.

**136)** அதன் பின் மரணம் அடைந்தவர் பெண் என்றால் பெண்களும், ஆண் என்றால் ஆண்களும் ஈரமாக உள்ள சடலத்தின் உடலை நன்றாகத் துடைத்து விட்டு அந்த சடலத்துக்கு மாற்று உடை அணிவிப்பார்கள்.

**137)** அதன் பிறகு புது வஸ்திரத்தை (வேஷ்டி-அங்கவஸ்திரம் அல்லது புடவை) போர்த்துவார்கள். அந்த வஸ்திரத்தின் முன்பாக தூபம் காண்பித்து அல்லது கோமூத்ரம் அல்லது கங்கை தீர்த்தம் தெளித்து சுத்திகரிக்கப்பட்டிருக்க வேண்டும்.

**138)** சடலத்தை அலம்பி விட்ட தண்ணீரை துடப்பத்தினால் தள்ளி அலம்பக் கூடாது. அந்த தண்ணீரை துணியால் துடைத்து எடுத்து ஒரு பாக்கெட்டில் பிழிய வேண்டும். அதன் காரணம் அந்த தண்ணீர் புனிதமான, அபிஷேகம் செய்யப்பட்ட நீருக்கு சமமான நீராகும் .

**139)** இறந்தவர்கள் உடலில் நகைகள் ஏதாவது அணிவிக்கப்பட்டு இருந்தால் அதை அந்த நேரத்தில் கழற்றி எடுத்து விடுவார்கள். அதன் பின்னர் அனைவரும் தெற்கு பக்கமாகப் பார்த்து சவத்தை நமஸ்கரித்தப் பின்னர் பிணத்தை எடுத்துச் செல்ல ஏற்பாடு செய்வார்கள். இவை அனைத்தையும் அங்குள்ள புரோகிதர் மந்திரங்கள் ஓதி நடத்தி வைப்பார்.

**140)** சடலத்தின் மீது போர்த்தப்பட்ட துணியின் பாதப் பகுதியின் துணியில் இருந்து கால் பாகம் வெட்டி எடுத்து வைத்துக் கொண்டு சடங்குகளை செய்யும் கர்த்தா அதை அங்கவஸ்திரமாக 12 நாட்களுக்கு அணிய வேண்டும். அந்த அங்கவஸ்திரத்தை தொலைக்கக் கூடாது. 12-ம் நாள்

அன்று அதே துணியை பிண்டம் போடும்போது பிண்டத்தோடு வைத்து அதையும் சேர்த்து தண்ணீரில் போட்டு விட வேண்டும் (விஸர்ஜனம்).

**141)** சடலத்திற்கு அபிஷேக பூஜை செய்து, புதிய வஸ்திரங்களை அணிவித்த பின்னர், அதை வீட்டிற்கு வெளியே எடுத்து வருவார்கள். அங்கு தயாராக வைக்கப்பட்டு உள்ள பாடையில் சடலத்தின் தலை பகுதி கிழக்காகவும், கால் மேற்கிலும் இருக்குமாறு வைத்ததும், உரிமைக்காரப் பெண்களும், வீட்டுப் பெண்களும் அதன் வாயில் வாய்க்கரிசி போடுவார்கள்.

**142)** அதன் பின்னரே இறந்தவர்களின் உடலை ஒரு போர்வையினால் நன்கு மூடி வைத்தப் பின், அதை பாடையுடன் சேர்த்து கட்டிய பின்னர் நான்கு பேர்கள் அந்தப் பாடையை தூக்கி தமது தோள் மீது வைத்துக் கொள்ள, நெருப்புச் சட்டியுடன் இறந்தவரது மகன்கள் முன்னே செல்ல, பிணத்தின் பின்புறத்தில் இறந்து போனவரின் பேரப் பிள்ளைகள் தீப்பந்தம் ஏந்தியபடி பிணத்துடன் செல்வார்கள். நெருப்புச் சட்டி என்பது இறந்தவரின் உடலை தகனம் செய்ய அல்லது அடக்கம் செய்ய எடுத்துச் செல்லும்போது, கர்த்தா கையில் ஏந்தியிருக்கும் ஒரு சிறிய மண் சட்டியாகும். இதில், ஒரு விளக்கைப் போட்டு எரிய விட்டு எடுத்துச் செல்வார்கள்.

## ஜீவாத்மாவின் பயணம் -6 (a)
## தகனம் செய்ய கிளம்பும் வீட்டில் செய்யப்படும் சடங்குகள் - அவற்றின் காரணங்கள்

**143)** எதனால் தீ சட்டியை சடலத்திற்கு முன்னால் கர்த்தாக்கள் எடுத்துச் செல்கின்றார்கள் என்றால், இறந்து போனவருடைய ஜீவாத்மா, அது வாழ்ந்த வீட்டில் இருந்து மயானத்திற்கு செல்லும் பாதை அதற்கு விளங்க வேண்டும் என்பதற்காக ஒரு ஒளி விளக்கைப் போல அதை சம்பிரதாயமாக எடுத்துச் செல்கின்றார்கள். அப்போதுதான் மயானத்தில் இருந்து வீட்டிற்கு திரும்பி வருவதற்கு ஜீவாத்மாவிற்கு வழி தெரியுமாம். மயானத்தில் இருந்து

ஜீவாத்மா வசுக்கள், ஆதித்யர்கள் மற்றும் ருத்திரர்களுடன் மீண்டும் திரும்பி வந்தால்தான் அடுத்த பன்னிரண்டு நாட்களும் அது வாழ்ந்த வீட்டில் தங்கி இருந்தபடி இறந்தவருக்கு செய்யப்படும் சடங்குகளில் பங்கேற்ற பின்னர் அங்கிருந்து யமபுரிக்கு பன்னிரண்டாம் நாள் அது தனது பயணத்தை துவக்க முடியும்.

**144)** இறந்தவரின் பேரன்கள் தீப்பந்தம் தூக்கிச் செல்லும் பழக்கம் இறந்தவரது குடும்பத்து சிறுவர்களும் சுடுகாட்டுக்கு செல்லும் உடலுக்கு தீ மூட்டி எரிக்க தானும் உரிமை உள்ள கர்த்தா என்பதை காட்டவும், மேலுலகம் செல்லும் ஜீவாத்மாவுக்கு மரியாதைக் கொடுத்து அனுப்ப வேண்டும் என்பதற்காகவும் செய்யப்படும் ஐதீகமே தவிர அதற்கு வேறு எந்த விஞ்ஞான பூர்வமான அல்லது சாஸ்திர காரணமோ கிடையாது. சில குடும்பங்களில் பிள்ளைகளோ மற்ற கர்தாக்களோ இல்லை என்றால் இறந்தவரது பேரன்கள் கர்மாவை செய்ய உரிமை உள்ளவர்கள் ஆகின்றார்கள்.

**145)** முன் காலங்களில் பேரப் பிள்ளைகளும் சுடுகாடுவரை சென்று சிதைக்கு கொள்ளி வைக்கும் பழக்கம் இருந்தது. தற்போது பலரது வீடுகளிலும் சிறு பிள்ளைகளை சுடுகாட்டிற்கு அழைத்துச் செல்வது இல்லை. சுடுகாட்டில் பிணங்களைக் கண்டு அவர்கள் பயந்து விடுவார்கள் என்பதே அதன் காரணம். மேலும் அந்த சிறுவர்களும் பின் வரும் நாட்களில் தாம் பெரியவர்கள் ஆகும்போது இறந்து போக உள்ள தமது தாய் தந்தைக்கு சடங்குகளை எப்படி செய்ய வேண்டும் என்பதை எடுத்துக் காட்டும் போதனையாக இருக்கவே சாஸ்திர சம்பிரதாயமாகவும் அவற்றைக் காட்டி உள்ளார்கள்.

**146)** முன் காலங்களில் சுடுகாடு எத்தனை தூரம் இருந்தாலும் பிணத்தை மாறி மாறி நான்கு பேர் தூக்கிக் கொண்டு நடந்தே சுடுகாடுவரை செல்வார்கள். அந்த காலத்தில் சவங்களை தோளில் மட்டுமே சுமந்து கொண்டு செல்வது நடைமுறையில் இருந்தது என்பதின் காரணம் மனிதர்களும் திடகார்த்தமாக இருந்தார்கள் என்பதே.

**147)** சுடுகாடுகள் நீண்ட தூரத்தில் இருந்ததினாலும், இயற்கையின் நியதியினால் சவத்தின் எடை அதிகரிக்கத்

துவங்கும் என்பதினாலும், நேரமாக நேரமாக, உடல் எடை அதிகரித்துக் கொண்டே இருக்கும் சவத்தை அத்தனை தூரமும் சுமந்து கொண்டே செல்ல கஷ்டமாக இருந்ததினாலும் பாதி தூரம் சவத்தை தோளிலே வைத்துக் கொண்டு சம்பிரதாயமாக நடந்து சென்றதும், பாடைகளுடன் கட்டப்பட்ட சவங்களை ஒரு கட்டை வண்டியில் வைத்து இழுத்துச் செல்வார்கள்.

**148)** அந்த பழக்கம் தற்போது வாகன வண்டிகளில் எடுத்துச் செல்வதில் வந்துள்ளது. இரண்டு முறைகளுமே தவறல்ல. சாஸ்திரத்துக்கு எதிரானதும் அல்ல. காரணம் சவத்தை தோளில் மட்டுமே சுமந்து கொண்டு செல்ல வேண்டும் என்று எந்த சாஸ்திரங்களிலும் கூறப்படவில்லை.

**149)** தோளில் தூக்கிக் கொண்டு செல்வது இறந்தவரது குடும்பத்தினருக்கு தாமும் தோளோடு தோள் கொடுத்து துணையாக நின்று இருப்போம் என்பதை எடுத்துக் காட்டும் சம்பிரதாயமே ஆகும்.

**150)** வழியில் மூன்று முறை பிரேதத்தை கீழே வைத்து பலி கொடுக்க வேண்டும். பலி என்பது வீட்டில் செய்து எடுத்து வந்திருந்த பாதி சமைத்த அரிசியாகும். வழியில் மூன்று முறை அதை செய்யாவிடில் மயானத்திலாவது மூன்று முறை கீழே வைத்து பலி கொடுக்கா விட்டால் வழியிலுள்ள ஜீவன்கள் இந்த ஜீவாத்மாவை துன்புறுத்தும் .

**151)** பிணத்தை தகனம் செய்வதற்கு முன் அதன் வாயில் சிறிதளவு அரிசி தானியங்களைப் போடுவதற்கான தத்துவார்த்த காரணம், யமபுரிக்கு பயணிக்க உள்ள ஜீவாத்மாவானது பசி தாகம் இன்றி இருக்க வேண்டும் என்பதற்காகத்தான் செய்யப்படுகின்றது; மேலும் உறவினர்களுக்கும் அதுவரை இறந்து போனவருக்கு தாம் உணவு தரவில்லை எனில், அந்த கடைசி நேரத்திலாவது அவருக்கு உணவு கொடுத்தோமே என்ற மன நிறைவு இருக்கட்டும் என்பதற்காக போடப்படும் சம்பிரதாயமே தவிர அதன் தத்துவம் வேறு எதுவும் இல்லை.

**152)** ஆன்மீகத்தில் அரிசியை தெய்வீகத் தன்மைக் கொண்டதாகக் கூறுவார்கள். ஹோமம் ஆனாலும் சரி, பூஜைகள் ஆனாலும் சரி அவற்றில் அரிசி முக்கிய இடம் பெறுகிறது. அரிசி மீதுதான் பூஜை கலசங்களைக் கூட வைத்திருப்பார்கள். மஞ்சள் அரிசியைத்தான்

பூஜைகளிலும் உபயோகிப்பார்கள். ஹோம குண்டத்தில் அரிசியைப் போடுவது முக்கியமான சடங்கு ஆகும்.

**153)** எந்த நாடாக இருந்தாலும் சரி, எங்கு மரணம் நிகழ்ந்தாலும் சரி, இந்துக்கள் அங்கெல்லாம் மரணம் அடைந்தவர் வாயிலே கடைசியாக போடுவது அரிசி தானியமே தவிர பருப்புக்களோ, கோதுமையோ அல்லது பிற தானியமோ இல்லை. இறந்தவரது வாயில் போடப்படும் அரிசியும் அவர் உடலை தகனம் செய்யும்போது எரிந்து போகும். இறந்தவர் உடலை தகனம் செய்யும் சடங்கு ஒரு விதத்தில் அந்த புனித ஜீவாத்மாவுக்கு செய்யப்படும் ஹோமம் போன்றது. எப்படி ஹோம குண்டத்தில் அரிசியைப் போடுவது முக்கியமாக உள்ளதோ அது போலவேதான் இறந்தவரது வாயையும் ஹோம குண்டமாகக் கருதி அதில் அரிசியைப் போட்டு உடலை தகனம் செய்கிறார்கள் என்பதே ஐதீகம்.

**154)** சாஸ்திர நம்பிக்கையின்படி இறந்தவரது வாயில் போடப்படும் அரிசியானது அவர் உடலை விட்டு வெளியேறிய ஜீவாத்மாவினால் ஆவாகிக்கப்பட்டு அந்த குடும்பத்தின் ஏழு தலை முறைக்கான ஜீவாத்மாக்களுக்கும் பங்கிட்டு தரப்படும், அதன் மூலம் அந்த பித்ருக்களின் மனம் சாந்தி அடையும் என்பதாக புராணங்களில் கூறப்பட்டுள்ள செய்திகளின் அடிப்படையிலும் நம்பிக்கைகளின் அடிப்படையிலும் அந்த சடங்கு செய்யப்படுகிறது. அதை செய்வதின் மூலம் வாய்க்கரிசி போட்டவர்களது குடும்பத்துக்கு மேலுலகில் உள்ள ஜீவாத்மாக்களின் ஆசிகள் வந்து சேரும், அது அவர்களுடைய குடும்பத்தைக் காப்பாற்றும் என்பார்கள்.

**155)** முன் காலங்களில் பொதுவாக, மரணச் சடங்கு நடைபெறும் வீடுகளில், பசுவின் சாணத்தால் சுத்தம் செய்யப்பட்ட தரை மீது ஒரு கூடாரம் அமைக்கப்படும்; சுகாதாரத்தைப் பிரதிபலிக்கும் வகையில் பசுவின் சாணத்தால் தரை சுத்தம் செய்யப்படும். சடங்கில் கலந்து கொள்ளும் உறவினர்கள் வசதியாக அமர்ந்து கொள்ள இந்த வசதி செய்யப்பட்டு வந்திருந்தது. கூடாரத்தின் முன் பகுதி மா இலைகள் மற்றும் பூக்களால் தொடுக்கப்பட்ட

மாலைகளால் அலங்கரிக்கப்படும். பண்டைய காலங்களில் நிலவிய இத்தகைய பாரம்பரியம், அடுக்குமாடி குடியிருப்புகளுக்குள் உள்ளவர்களால் செய்யப்பட முடிவது இல்லை. காரணம் அத்தகைய ஏற்பாடுகள் பிற குடியிருப்பாளர்களிடமிருந்து ஆட்ஷேபணைகளை பெறுகின்றது. ஆகவே தற்போது கிராமப்புறங்களில் மட்டுமே இந்த முறை இன்றும் பின்பற்றப்படுகிறது.

**156)** மரணம் அடைந்து விட்டவர் வீட்டு வாயிலில் அடுத்த பன்னிரண்டு நாட்களும் கோலங்களை போட்டு அலங்கரிக்கக் கூடாது. நமது இல்லத்திற்கு தினசரி நாம் ஆராதிக்கும் தெய்வங்களும் தேவர்களும் வருகிறார்கள் என்று ஐதீகம் உள்ளது. ஆகவே அவர்களை வரவேற்கும் விதமாக இருக்க வேண்டும் என்பதற்காகவே மங்களச் சின்னமாக கோலத்தைப் போடுவார்கள். ஆனால் இறந்தவர் வீட்டில் தற்காலிகமாக மங்கள காரியங்கள் நடைபெறாமல் இருக்கும் என்பதாலும், இறந்தவர்களின் ஜீவாத்மா அங்கிருந்து செல்லும்வரை தெய்வங்களோ அல்லது தேவர்களோ அங்கு நுழைய மாட்டார்கள் என்பதாலும் சடலத்தை எடுத்த பின்னர் கூட அடுத்த பன்னிரண்டு நாட்களும் இறந்தவர்கள் வீடுகளில் கோலங்களை போடக் கூடாது.

**157)** இறந்தவர்கள் வீடுகளில் முதல் நாளிலிருந்து பன்னிரண்டு நாட்கள் துக்க காலத்தில், வீட்டில் எந்த சமையல் சாதனத்தையும் பற்ற வைத்து சமைக்க கூடாது. இறந்தவர்களின் நெருங்கிய உறவினர்களின் வீடுகளிலிருந்து இறந்தவர்களின் குடும்பத்திற்கான உணவு தினமும் அனுப்பப்படுகின்றது. அதற்கான காரணங்கள் இறுதியில் கொடுக்கப்பட்டுள்ளன.

## ஜீவாத்மாவின் பயணம் -7
## பிணத்தை எரிக்கும் முன் செய்யப்படும் சடங்குகள்

**158)** மயானத்தை அடைந்ததும் மயானத்தில் விறகுகளை அடுக்கி வைத்து தயார் செய்யப்பட்டுள்ள சிதை மேடையை புரோஹிதர் கூறியபடி சுற்றிய பின் பூத

உடலின் தலைப் பகுதி தெற்கு திசையில் இருக்கும்படி பாடையை சிதை மேடை மீது வைப்பார்கள். அதாவது உடலின் தலைப் பகுதியானது மயானத்தை நோக்கி வைக்கப்படும். சிதையில் பூதவுடல் வைக்கப்பட்டதும் பாடையுடன் சேர்த்துக் கட்டி இருந்த கட்டுகள் எல்லாம் அவிழ்க்கப் பட, அந்த உடலில் உள்ள மேற்போர்வையைத் தவிர அதன் கீழ் உள்ள அரைஞாண் கயிறு வரை அனைத்தையும் எடுத்து விடுவார்கள். அதாவது போர்வையின் கீழ் உள்ள உடல், நிர்வாண நிலையில் வெற்றுடம்பாக இருக்கும்.

**159)** அதன் பின் அங்குள்ள புரோகிதர் மந்திரங்கள் ஓதி சில சடங்குகளை செய்த பின், பங்காளிகள் மீண்டும் சவத்தின் வாயில் வாய்க்கரிசி போடுவார்கள். கர்மாவை செய்ய வந்துள்ளவர் தனது இடது தோளில் சுட்ட களி மண்ணினால் செய்யப்பட்ட தண்ணீர் நிறம்பிய மண் குடத்தை ஏந்திக் கொண்டு முதலில் சிதையை இடப் பக்கமாக சுற்றி வந்து, குடத்தை தலைப் பக்கத்தில் வைத்து அதில் கும்ப நீரை கொட்டிய பின், மேலும் சவத்தின் மீது அரிசி, சின்ன தங்கக் காசு அல்லது நாணயங்களை வைத்தப் பின் சவத்தின் வாயில் அரிசியைப் போடுவார். இந்த சடங்கும் குடும்பத்துக்கு குடும்பம் மாறுபட்டு இருக்கும்.

**160)** உடலை சிதையில் வைத்த பின் வாய், வலது கண், இடது கண், வலது மூக்கு, இடது மூக்கு, வலது மற்றும் இடது காது ஆகிய ஏழு இடங்களில் சிறிது நெய்யை விட வேண்டும், பண்டை காலத்தில் அந்த இடங்களில் சின்ன தங்கம் வைக்க வேண்டும் என்பதாக எழுதி இருக்கிறார்கள். ஆனால் காலம் மாற மாற தங்கத்திற்கு பதில் நெய் விடத் துவங்கினார்கள். இப்படியாக அந்த ஏழு துவாரங்களில் நெய் விடுவதின் காரணம் அந்த ஏழு துவாரங்களும் உடலில் இருந்து வெளியேறும் ஜீவாத்மா வெளியேறிச் செல்லும் புனித வழிகள் மற்றும் உடலில் உள்ள ஏழு சிறிய ஹோம குண்டங்கள் என்பதாகும்.

**161)** பிறகு பிரேதத்தின் மீதோ அதன் வாயிலோ எள்ளுடன் கலந்த அரிசியை (வாய்க்கரிசி) அங்குள்ள பந்துக்கள் போட வேண்டும்.

**162)** அதன் பின் முன் போல மீண்டும் மண் குடத்தை இடதுபுற தோளில் வைத்துக் கொண்டு ஒரு சந்தனக் கட்டையை பின் பக்கமாக ஏந்திய வண்ணம் சவத்தை இடப் புறமாக மூன்று முறை சுற்றி வருவார். ஒவ்வொரு சுற்றின் போதும் அவர் பின்னால் செல்பவர் சிறு கல்லினால் மண் குடத்தில் ஒரு சின்ன ஓட்டை இட அந்த ஓட்டை வழியே விழும் தண்ணீர் சவத்தின் மீது விழும். அதை இறந்தவரது உடலுக்கு செய்யும் கடைசி அபிஷேகம் என்பார்கள்.

**163)** அதற்கு முன்பாக தர்ப்பைகளால் செய்த ஐந்து தர்பை கொத்துக்களை ஆவாஹனம் செய்து பூஜித்து தஹன சமயத்தில் பிரேதத்தின் தலை, கண், வயிறு, நாபி, கால் ஆகிய ஐந்து இடங்களில் வைக்க வேண்டும். அவை எரிந்து போக உள்ள உடலை தூய்மைப்படுத்துவதான அர்த்தம் ஆகும்.

**164)** கர்மாவை செய்பவர் துவாரம் இடப்பட்ட மண் குடத்தை ஏந்திக் கொண்டு சீதை மீது வைக்கப்பட்டு உள்ள சடலத்தை மூன்று முறை சுற்றி வந்த பின்னர் சிதையை பார்க்காமல் சிதையின் எதிர் திசையைப் பார்த்து நின்றபடி 'ஓம்' எனக் கூறிக் கொண்டே சந்தனக் கட்டையை (அதில் சிதையை எரிக்க நெருப்பு இருக்கும்) சிதையின் தலைப் பகுதியில் வைத்தப் பின் குடம் உடையும் வகையில் முன் புறமாக குடத்தை கீழே போட்டு உடைத்து விடுவார். இந்த சடங்கும் குடும்பத்துக்கு குடும்பம் மாறுபட்டு இருக்கும். சில குடும்பங்களில் கர்த்தா சிதையை பார்த்தபடி நின்றவாறு சந்தனக் கட்டை கொள்ளியை சிதை மீது வைக்கும் பழக்கமும் உண்டு.

**165)** அதன் பின்னர் கர்த்தா சிதைக்கு தர்பை மூலம் கொள்ளி வைத்து விட்டு உடல் முழுவதும் எரியும் வரை அங்கேயே நின்று கொண்டு இருப்பார்கள். சிதைக்கு தீ வைக்க பயன்படுத்த வேண்டிய பல வகைகளிலான அக்னி தர்பையை எப்படி தயார் செய்வது என்பதை மயானத்திலேயே அந்தந்த குடும்ப புரோகிதர் கூறுவார்.

**166) 'உத்தபனாக்னி':-** இது மூன்று தர்பை கொத்தை கொளுத்தி அதிலிருந்து ஏற்படுத்தப்படும் அக்னி ஆகும். அதாவது முதலில் ஒரு கொத்து தர்பையை அக்னியில் காட்டி, அந்த தர்பையில் உண்டாகும் அக்னியில் இருந்து இரண்டாவது தர்பை கட்டில் அக்னியை மூட்டி, அதில்

இருந்து வெளியாகும் அக்னியில் இருந்து மூன்றாவது தர்பைக் கட்டில் தீ மூட்டி, அந்த அக்னி தர்பையை சீதை மீது வைத்து தீ மூட்டுவார்கள்.

**167)** அதன் பின்னர் கர்த்தா சிதைக்கு தர்பை மூலம் கொள்ளி வைத்து விட்டு பிரேதத்தின் பாதங்கள் உள்ள பகுதிக்குச் சென்று தன் விரலில் அணிந்திருந்த தர்பைப் புல்லினால் ஆன பவித்திரம், பூணூல் போன்றவற்றை கழற்றி சிதையில் போட்டு வணங்குவார்கள்.

**168)** மனைவியை இழந்த கணவனுக்கும், கணவனை இழந்த மனைவிக்கும் 'உத்தபனாக்னி' அக்னி மூலமே தஹன ஸம்ஸ்காரம் செய்வார்கள்.

**169)** ‘**கபாலாக்னி’:-** பிரும்மச்சாரிகளை தகனம் செய்யும்போது மண் பாத்திரத்தை அக்னியில் வைத்து நன்றாக சூடாக்கி, அதில் கொஞ்சம் வரட்டி தூளை போட்டு தீ பிடிக்க வைத்து அதை தகனத்துக்கு பயன்படுத்துவார்கள். அதை ‘கபாலாக்னி’ என்பார்கள்.

**170)** **‘துஷாக்னி’:** ஒரு மண் பாத்திரத்தை தீயில் நன்றாக சூடாக்கி, அதில் சிறிதளவு உமியை போட்டு அக்னியை உண்டு பண்ணி, அந்த அக்னியை சிதையில் வைக்கப்பட்டு உள்ள உபனயனம் ஆகாத ஆணுக்கும், திருமணம் ஆகாத பெண்ணின் தகனத்துக்கும் பயன்படுத்துவார்கள்.

**171)** **ஔபாசனாக்னி** : தம்பதிகளில் ஒருவர் இறந்தால் ஔபாசனாக்னி எனும் அக்னியை உபயோகிக்க வேண்டும். ஔபாஸனம் என்பது உபாஸனையைக் குறிக்கும். ஆகவே பல தேவதைகளைப் பூஜை, மந்திரம், தியானம் முதலியவற்றால் உபாசித்து ஏற்படுத்தப்படும் அக்னியே ஔபாசனாக்னி எனப்படுகின்றது.

**172)** முன் காலங்களில் விறகுகளை அடுக்கி அதன் மீது பிணத்தை வைத்து எரித்தது போல் இல்லாமல் இந்த காலத்தில் மின்சாரத்தில் இயங்கும் மின்னடுப்பில் பிணங்களை எரித்து விடுவதினால் சிதை பீடத்தில் வைத்த சவத்திற்கான சடங்குகளை செய்து முடித்தப் பின் பாடையுடன் கூடிய உடலை எடுத்து வந்து மின்சார யந்திரத்தின் மேடை மீது வைத்தப் பின் சம்பிரதாயமாக கொள்ளிக் கட்டையை அதில் வைப்பார்கள். அதன் பின்

அங்குள்ள தொழிலாளி பாடையுடன் உள்ள உடலை யந்திரத்தின் உள்ளே தள்ளி கதவை மூடி விடுவார். உடல் சற்று நேரத்திலேயே எரிந்து சாம்பலாகி விடும்.

# ஜீவாத்மாவின் பயணம் -7 (a)

## சுடுகாட்டில் பிணத்தை எரிக்கும் முன் செய்யப்படும் சடங்குகள் - அவற்றின் காரணங்கள்

**173)** இறுதி புனித அபிஷேக பூஜை செய்வதற்கான முதல் காரணம் - குடத்தின் துளையிலிருந்து சடலத்தின் மீது தண்ணீர் பாய அனுமதிப்பது - இறந்தவரின் பாவங்களை நீக்கி, ஆன்மா சாந்தியடைய வழி வகுக்கும். ஒரு நபர் பல தீய செயல்களைச் செய்திருந்தாலும், அவர் தனது வாழ்நாளில் சில நல்ல செயல்களையும் செய்திருக்கலாம் என்று தர்ம சாஸ்திரம் கூறுகிறது; எனவே, இறந்தவருக்கு குறைந்தபட்சம் அந்த நல்ல செயல்களுக்கு மரியாதை காட்ட வேண்டும் என்பதினால் அவருக்கு உரிய மரியாதையுடன் இறுதி சடங்குகள் செய்யப்படுகின்றன. இந்த செயல் மூலம் ஆன்மாவை கங்கை நதியில் நீராட்டுவதைக் குறிக்கிறது.

**174)** இரண்டாவது தத்துவம் என்ன என்றால் அந்த ஜீவன் தீயில் எரிந்து போனாலும், அதன் ஜீவாத்மா தாகத்தோடும் பசியோடும் இருக்கக் கூடாது என்பதற்காக அடுத்த பன்னிரண்டு நாட்களும் அந்த குடத்தில் சமையல் செய்து ஜீவனின் பசியைப் போக்கி (பிண்டம்), குடிப்பதற்கு தண்ணீரும் தருகிறோம் என்பதை எடுத்துக் காட்டும் சம்பிரதாய செயல் அது.

**175)** மூன்றாவது தத்துவம் என்ன என்றால் இறந்தவரது உடலை தொடர்ந்து வந்திருந்த ஜீவாத்மா அந்த மயானத்தில் பிண்ட தண்ணீரை மானசீகமாக பருகத் துவங்கி தனது தாகத்தை தீர்த்துக் கொள்ளத் துவங்குமாம்.

**176)** அதாவது கர்த்தா படைக்கும் பிண்ட தர்ப்பணத்தை - தனது தாகத்தை தீர்க்க செய்யப்படும் அந்த செயலை மயானத்தில் கர்த்தா செய்யும்போது- அதைக் காணும் ஜீவாத்மாவின் மனதில் மகிழ்ச்சி ஏற்படுமாம். அது மனமார தனது சந்ததியினரை ஆசிர்வதிக்குமாம். நமது உடல் மண்

குடம் போன்றது, மண் குடம் கீழே விழுந்தால் எப்படி உடைந்து விடுமோ அது போலவேதான் நமது வாழ்க்கையும் நிரந்தரம் அல்ல என்பதினால் வாழும்போது மற்றவர்களுக்கும் பயனுள்ளவர்களாக வாழ வேண்டும்.

**177)** உடலை எதற்காக எரிக்கிறார்கள் என்பதை புரிந்து கொள்ள வேண்டியது அவசியம். மயானத்தில் வசிப்பவர் சிவபெருமான். அவர் தனது உடலில் பூசிக் கொள்வது சாம்பல். ஆரம்பமும் அவரே (பரபிரும்மன்), முடிவும் அவரே என்பதை பிரதிபலிக்கும் விதத்தில் சிவசக்தியாக படைப்பையும், ருத்திரராக அழிக்கும் செயலையும் தன்னுள் அடக்கி வைத்துக் கொண்டு உள்ளவர் அவர். ஆகவே மயானத்தில் எரிக்கப்படும் உடல் சிவபெருமான் பூசிக் கொள்ளும் சாம்பலாக உருமாறுவதின் மூலம் ஜீவன் சிவபெருமானையே சென்று அடைந்து விடும் தத்துவத்தை வெளிப்படுத்துகின்றது.

**178)** பூமியில் போடப்படும் ஒரு விதை செடியாகவோ அல்லது மரமாகவோ மாறி, அதிலிருந்து பறிக்கப்படும் பழங்கள் இறைவனுக்கு நைவித்தியமாக கொடுக்கப்படுவது போல, மனிதர்களும் பூமியில் பிறவி எடுத்து, வாழ்க்கையின் பல்வேறு நிலைகளை அனுபவித்த பிறகு, அதற்கு நன்றி செலுத்தும் விதமாக, தங்கள் உடலை இறுதியில் சாம்பலாக மாற்றி அந்த தெய்வத்திற்கே அர்ப்பணிக்கிறார்கள்.

**179)** சாஸ்திரங்களில் மரணம் அடைந்தவரின் உடலை தஹனம் செய்வதை 'அந்த்யேஷ்டி' அதாவது 'இறுதி வேள்வி' என்றே ரொம்பவும் உயர்வாக கூறி உள்ளார்கள். யாகங்களை வேள்வி என்பார்கள். அது போலவேதான் ஒரு புனித ஜீவாத்மா குடி இருந்த பதினாறு தெய்வீக ஆற்றல்களை கொண்ட உடல் எனும் ஜடப் பொருளும் தெய்வீகமானது என்பதினால், அந்த உடலை எரிப்பதும் ஒரு புனிதமான வேள்வி போன்றதுதான், என்பதாகவே சாஸ்திரங்கள் கூறி உள்ளன. அந்த பிரேத சம்ஸ்காரம் செய்தால்தான் அந்த உடலின் கண்ணில் ஸூர்யன், வாயில் அக்னி, கையில் இந்திரன் என்றெல்லாம் இருக்கின்ற தெய்வாம்சங்கள் அதனதன் மூலஸ்தானத்துக்கு திரும்பப் போகும்.

**180)** எவன் இந்த உடம்பைக் கொடுத்தானோ அவனிடமே அதைத் திருப்பிக் கொடுத்து விட வேண்டும் என்கின்றது சாஸ்திரம் என்பதினால்தான் உலகத்தில் எந்த மூலையில் இருந்தாலும், அவர்கள் என்ன சமயத்தை சேர்ந்தவர்களாக இருந்தாலும் எதோ ஒரு வகையில் இறந்தவர்களது சடலத்தை மரியாதையுடன் தகனம் செய்தோ,அடக்கம் செய்தோ அல்லது மௌனக் கோபுரத்தில் உள்ள பறவைகளால் உண்ணும்படி தூக்கி எறியப்பட்டோ (ஜோராஸ்ட்ரியனிசம்-பாரசீகர்கள்), உடலை தந்தவரிடமே தமது உடலை தந்து விடுகின்றார்கள்.

## ஜீவாத்மாவின் பயணம் -7 (b)
## இறந்து போனவர்களை எரிப்பது அல்லது புதைப்பது

**181)** இறந்து போனவர்களை தகன சடங்குகள் செய்து நெருப்பில் போட்டு சாம்பலாக்கி விடுகின்றார்கள், அல்லது உடலை புதைத்தும் விடுகின்றார்கள்.

**182)** முன் காலங்களில் கர்ப்பவதி பெண் மரணம் அடைந்து விட்டால், வயிற்றில் இருக்கும் கருவை, தாயை எரிக்கும் முன்னர், தனியாக எடுத்து புதைத்து விடுவார்கள். அதை போலவேதான் குழந்தை பிறந்தவுடன் இறந்து விட்டால் அல்லது இறந்தே பிறந்து விட்டாலும் அதை வீட்டு தோட்டத்தில் அல்லது நதிக் கரைகளில் யாருக்கும் தெரியாமல் புதைத்து விடுவார்கள். அதன் காரணம் குழந்தையின் மண்டையோடு சக்தி வாய்ந்தது என்பதே ஆகும். பிறக்காமல் இறந்த எந்த ஒரு உயிராக இருந்தாலும், அந்த உடலை தீ மூட்டி எரிக்கக் கூடாது, புதைக்க வேண்டும் என்று சாஸ்திரங்களில் கூறப்பட்டு உள்ளதாம்.

**183)** சிறு குழந்தைகளின் மண்டையோடு சில குறிப்பிட்ட தேவதைகளின் தெய்வீக சக்தியை உள்ளடக்கிக் கொண்டு இருக்கும். இது தெய்வ நியதி; நமது கற்பனைகளுக்கும் அப்பாற்பட்ட காரணங்களைக் கொண்டுள்ள உண்மையாகும். மண்டை ஒடு நமது உடலில் உள்ள பத்தாவது மிக உயர்ந்த ஆற்றல் மையம் அல்லது சக்கரம் என்று நம்பப்படுகிறது, இது ஆன்மா உடலில் நுழைந்து வெளியேறும் நுழை வாயிலாகும்.

**184)** இறந்து போய் விட்ட குழந்தைகளை மயானத்தில் சென்று எரித்து விட்ட பின்னர் யாரும் அந்த சடலம் முழுவதும் எரிந்து சாம்பலாகும்வரை சுடுகாடுகளில் பல மணிநேரம் காத்திருக்க மாட்டார்கள். சடலத்திற்கு தீ மூட்டி அது நன்கு எரிய ஆரம்பித்ததும் அடுத்த சடங்கை துவக்கக் கிளம்பிச் சென்று விடுவார்கள். அங்கு அதற்காகவே காத்திருக்கும் மந்திரவாதிகள், அந்த குடும்பத்தினர் அனைவரும் சென்று விட்டதும், எரியும் நெருப்பில் இருந்து குழந்தைகளின் மண்டை ஓட்டை வெளியே எடுத்து கொண்டு சென்று விடுவார்கள்.

**185)** குறிப்பிட்ட தெய்வீக சக்தியை உள்ளடக்கிக் கொண்டு இருக்கும் சிறு குழந்தைகளின் மண்டையோடு மந்திரவாதிகளின் கைகளில் கிடைத்து விட்டால் அதைக் கொண்டு அவர்களால் சில தவறான சக்திகளை பெற முடியும்.

**186)** அதனால்தான் முன் காலங்களில் எந்த சந்தர்ப்பத்திலும் குழந்தைகளை சுடுகாட்டிற்கு கொண்டு சென்று தகனம் செய்ய மாட்டார்கள். குழந்தைகளை யாருக்கும் தெரியாமல்தான் வீட்டின் பின்புறத்தில் புதைத்தோ அல்லது தகனமோ செய்து விடுவார்கள்.

**187)** குழந்தைகளின் புதைக்கப்பட்ட சடலங்களை தோண்டி எடுத்து மண்டை ஓடுகளை எடுக்க மாட்டார்கள், காரணம், புதைத்து விடப்படும் பிணத்தின் மண்டை ஓட்டின் தெய்வ சக்தி அழிந்து விடும் என்பதினால்தான் புதைத்த பிணங்களை தோண்டி எடுத்து மண்டை ஓட்டை எடுப்பது இல்லை. இது போன்ற பண்டைய கால பாரம்பரிய நம்பிக்கை செய்திகள் காலப்போக்கில் வாய்மொழிக் கதைகள் மூலம் தெரிய வருகின்றது.

**188)** ஒரு குடும்பத்தில் உள்ளவர்கள் எந்த முறையில் மரணம் அடைந்தாலும்- தற்கொலையோ, இயற்கை மரணமோ அல்லது கொலை செய்யப்பட்டு இறந்து போனாலும், மரணம் அடைந்தவர்களுக்கு செய்ய வேண்டிய நியமத்தை அவரவர் குல வழக்கத்தின்படி கடைபிடிக்க அந்தந்த வீட்டு புரோஹிதர்கள் கூறுவார்கள்.

**189)** ஒரு மனிதன் துர் மரணத்தை அடைந்தாலும், தற்கொலை, கொலை செய்யப்பட்டவர்

மற்றும் விபத்துக்களில் பலியானவர்கள் என எவராக இருந்தாலும் பொதுவாக அவர்களை தகனம் செய்ய வேண்டும் என்பதே சரியான சாஸ்திர முறை என புரோஹிதர்கள் கூறுகின்றார்கள்.

**190)** ஆனால் இந்து மத நம்பிக்கையின்படி குழந்தைகளின் உடல் புதைக்கப்பட வேண்டும் எனவும் பதினெட்டு வயதை தாண்டியவர்களின் உடல் தகனம் செய்யப்பட வேண்டும் எனவும் ரிக்வேதம் (10:16) அறிவுரைக்கின்றது.

**191)** ஆனால் தற்காலத்தில் குழந்தைகளின் உடலையும் மயானங்களில் எடுத்துச் சென்று எரித்து விடுகின்றார்கள். சுடுகாடுகளில் எவரும் அனுமதி இன்றி நுழைய முடியாது என்பதினாலும், மின்சார எரியூட்டிகள் உள்ளத்தினாலும் முன் காலங்களை போல மந்திரவாதிகளின் பயம் இல்லை.

## ஜீவாத்மாவின் பயணம் -8 நதிக்கரையில் அஸ்தி கரைப்பு, சடங்குகள்

**192)** மயானத்தில் மின் அடுப்பில் பூதவுடல் எரிந்து போன அரை மணி நேரத்திலேயே அங்குள்ள தொழிலாளி யந்திரத்தில் இருந்து சாம்பலையும் எலும்பையும் எடுத்து கர்த்தா செய்பவரிடம் தருவார்கள்.

**193)** மயானத்தில் மின் அடுப்பில் உடலை எரிக்காமல் விறகுக் கட்டை மீது வைத்து மயான பூமியிலேயே சாதாரண முறையில் தகனம் செய்பவர்கள் பிணத்தை தகனம் செய்த மறுநாள் மயானத்திற்கு சென்று சாம்பலையும் எலும்பையும் எடுத்து வருவார்கள்.

**194)** பிணம் எரிக்கப்பட்ட இடத்தில் சாம்பல் மீது பாலை ஊற்றி அதில் கிடக்கும் எலும்புகளை பொறுக்கி எடுத்து, அங்கு சில சடங்குகளை செய்த பின் அந்த சாம்பலையும் எலும்பையும் பால் நிறப்பிய மண் குடத்தில் போட்டு கடற்கரை அல்லது நதிக்கு கொண்டு சென்று அதில் அவற்றைக் கரைத்தப் பின் அங்கேயே அந்த நதி அல்லது கடலில் குளித்து விட்டு வீடு திரும்புவார்கள். இப்படியாக எலும்பை கடலிலோ நதியிலோ கரைக்கும் சடங்கை

சஞ்சயனம் என்று கூறுவார்கள். சஞ்சயனம் எனும் சடங்கு முடிந்த பின்னர் கர்த்தா அங்கு பண்டிதரால் தரப்படும் தர்ப்பை புல்லில் செய்யப்பட்ட மோதிரத்தை விரலில் அணிந்து கொள்வார்.

**195)** இறந்தபின் பிரேதத்தை எரித்து அதன் அஸ்தியை கடலிலோ அல்லது நதிகளிலோ கரைத்து விட வேண்டும் என்கிறது வேதம். எந்த ஒரு பிரேதத்திற்கு அந்திம கிரியை எனும் பிரேத ஸம்ஸ்காரங்கள் சரியான முறையில் செய்யப்படவில்லையோ அந்த ஜீவாத்மா மயானத்தில் தன்னுடைய எரிக்கப்பட்ட உடலில் உள்ள எலும்பை சுற்றி, சுற்றியே வந்தபடி இருக்கும்.

**196)** எதற்காக சஞ்சயனம் செய்கின்றார்கள். முதல் காரணம், எம லோகத்துக்கு செல்லும் வழியில் ஜீவாத்மா பசியாலும் தாகத்தாலும் அவதிப்படக் கூடாது என்பதினால் சடங்குகளை முறைப்படி செய்து விட்டு அதன் எலும்புகளை நதிகளில் கரைத்து விடுவார்கள். அந்த வேண்டுகோளை ஏற்றுக் கொள்ளும் அந்த நதிகளின் நீரானது ஜீவாத்மா தாகம் இன்றி இருக்க வேண்டும் என்பதற்காக அதன் சூட்சும உடலில் ஈரப் பதத்தை வைத்து விடும்.

**197)** நதிகளுக்கு அத்தனை சக்தி உள்ளதா என்றால் உண்டு என்பதே உண்மை. காரணம் நதிகள் தெய்வங்களினால் ஏற்படுத்தப்பட்டவை, இந்த உலகில் ஓடும் அனைத்து நதிகளின் தெய்வங்களும் கங்கை தேவியின் தெய்வீக கணங்களே என்பதினால் அந்த தெய்வங்களால் ஏற்படுத்தப்பட்டு உள்ள நதிகளும் கங்கை நதியின் கணங்கள்தான். கர்த்தா ஒரு பிரார்த்தனை செய்வார், 'உடலை விட்டு வெளியேறிய ஜீவன் எங்கு சென்றாலும், யாராக பிறந்தாலும், வாழ்க்கையின் அத்தியாவசிய தேவையான தண்ணீரைப் போல அனைவருக்கும் பயனுள்ளவாறு இருக்க வேண்டும்'

**198)** வசதி உள்ளவர்கள் அஸ்தியை காசிக்கு கொண்டு சென்று கங்கை நதியில் கலப்பது வழக்கம். கங்கைக்கு செல்ல முடியாதவர்கள் எந்த ஒரு நதியிலாவது அஸ்தியை கரைப்பார்கள்.

**199)** எதற்காக பாலில் எலும்புக்களைப் போட்டு எடுத்துச் செல்கின்றார்கள்? பிறந்த குழந்தையின் முதலில் உணவு அதை பெற்று எடுத்த தாயின் தாய்பால் ஆகும்.

இறந்தவர்களது ஜீவாத்மாவும் அதனதன் விதிப்படி எங்கோ சென்று குழந்தையாக பிறப்பு எடுக்கும். இந்த பிரபஞ்சத்தில் உள்ள அனைவருமே, மனிதர் முதல் அனைத்து ஜீவராசிகளுக்கும் மூல மற்றும் முதல் தாய் சக்தி தேவியே என்பதினால் அவளது குழந்தையாகவே பாவிக்கப்படும் ஜீவாத்மாவும் எம லோகத்தை சென்று அடையும் அளவிலான உடல் சக்தியுடன் இருக்க வேண்டும் என்பதற்காக தத்துவார்த்தமாக செய்யப்படுகின்றது.

**200)** மயானத்தில் எலும்புகளை எடுத்து மண் குடத்தில் உள்ள பானையில் போட்டதுமே அந்த மயானத்தில் கர்த்தாக்களுடன் வந்திருந்த அந்த எலும்பின் சொந்தக்காரரரான ஜீவாத்மா, அந்த பாலை மானசீகமாக ஆவாகித்துக் கொள்ளுமாம். எலும்புகளை எடுத்ததும் கர்த்தாக்கள் முக சவரம் செய்து கொண்டு தாடி மீசைகளை எடுத்து விடுவார்கள். சிலர் மொட்டை அடித்துக் கொள்வார்கள். சுடுகாட்டில் தலை முடி மற்றும் முக ஷவரம் செய்து கொள்வது இறந்தவர்களுக்காக செய்யும் அடுத்த 12 நாட்களுக்கான காரியங்களை இனி முக மலர்ச்சியோடு செய்வேன் என்பதைக் எடுத்துக் காட்டும் ஒரு பாவனை ஆகும்.

**201)** மொட்டை அடித்துக் கொள்வதற்கு இன்னொரு காரணமும் உள்ளது. தீய ஆவிகள் ரோம துவாரங்கள் வழியே சென்று உடலில் அமர்ந்து கொண்டு விடும். சுடுகாட்டில் சடங்குகள் செய்யப் போகும்போது இறந்து போனவர்களின் ஜீவாத்மாக்கள், வஸுக்களிடம் இருந்து தப்பி ஓடி அவர்களது ரத்த சம்மந்தம் உள்ளவர்களது, அதாவது அவர்கள் மீது அதிக அளவு பாசம் வைத்துள்ளவர்களது முடியில் சென்று அமர்ந்து கொண்டு வீடு திரும்ப முயலுமாம். அதனுடன் சுடுகாட்டில் உள்ள பிற ஜீவாத்மாக்களும் சேர்ந்து அமர்ந்து கொண்டு விடும். இதனால்தான் அந்த காலங்களில் மயானங்களில் சென்று திரும்பும் அனைத்து உறவினர்களும் அங்கேயே மொட்டை அடித்துக் கொள்வது வழக்கமாக இருந்துள்ளது.

**202)** இன்னமும் சில கிராமங்களில் அந்த ஊரில் உள்ள அனைவருமே ஒருவரது இறப்பில் மொட்டை அடித்துக் கொள்ளும் பழக்கம் உள்ளது என்பதன் காரணம் ஒருவர்

மரணம் அடைந்து விட்டால் கிராமத்தினர் அனைவருமே சடங்குகளில் பங்கு கொள்வார்கள் என்பதே.

**203)** இறந்தவரின் உடல் தகனத்திற்கு எடுத்துச் செல்லப்படும்போது, உடலை விட்டு வெளியேறிய ஜீவாத்மாவும் அதனுடன் சுடுகாடு வரை பயணித்து, தனது உடல் தகனத்தை நேரடியாக பார்க்கின்றது. அந்த சடங்குகளில் திருப்தி அடைந்ததும், அது தனது அடுத்த கட்ட பயணத்தை அமைதியோடு எதிர்கொள்ள தயாராகி விடும்.

**204)** இவை அனைத்தும் முதல் நாள் சடங்கு என்றாலும், பிணத்தை எடுத்த அடுத்த நாள் வரை தொடர்கிறது. அதன் காரணம் மின் அடுப்பில் உடனடியாக உடல் எரிந்து விடுவதைப் போல விறகுக் கட்டையில் அத்தனை விரைவாக உடல் எரிந்து விடாது. ஆகவே மறுநாள் தான் எலும்பை எடுக்க மயானத்துக்கு செல்ல வேண்டும். சில வீடுகளில் அந்த சடங்கு முடிந்தப் பின்னரே, மூன்றாம் நாள் கல் ஊன்றி கர்மாவின் பிற காரியங்களை செய்யத் துவங்குவார்கள்.

## ஜீவாத்மாவின் பயணம் -9

## பன்னிரண்டு நாள் சடங்குகள் (2 ஆம் நாள் முதல் 12 ஆம் நாள் வரை)

**205)** இனி அடுத்த பன்னிரண்டு நாட்களும் செய்ய வேண்டிய சடங்குகள் என்னென்ன என்பதையும் அவற்றின் தத்துவங்களையும் ஆராயலாம் .

**206)** மரணம் சம்பந்தமான வைதீக காரியங்களை அபர காரியம் அதாவது சுபம் அற்ற காரியம் என்று புரோஹிதர்கள் கூறுவார்கள். பரம்பொருள் என்றால் அழிவற்ற நிலையான ஜீவன் என்பது பொருள் ஆகும். அதற்கு எதிர்மாறான சொல்லான அபரம் என்பது நிலையற்ற அழியும் தன்மை கொண்ட ஜீவனைக் குறிக்கும். அதனால்தான் இறந்து போன சடலத்துக்கு சடங்கு செய்வது என்பதினால் அபர காரியம் என்பதாக கூறப்படுகின்றது. அதையே சாஸ்திரமும் கூறுகிறது.

**207)** இறுதிச் சடங்குகளை முடித்துக்கொண்டு கர்த்தா வீடு திரும்புவதற்கு முன்பு, வீட்டிற்குள் புரோகிதர் சென்று பிரேதம் கிடந்த அறையிலும், வீட்டிலும் முதல் நாளைய புண்யாஜனம் செய்து வைத்து இருப்பார். சுத்தம் சுத்தம் செய்யப்பட்டு, அடுத்த பன்னிரண்டு நாட்கள் சடங்கைத் நடத்தத் தயாராக வைக்கப்படும். அதன் பின்னர் பாஷாண ஸ்தாபனம் எனப்படும் கல் ஊன்றுதல் சடங்கு நடைபெறும்.

**208)** வீட்டின் பின் பகுதியில் தகனத்திற்குப் பிந்தைய சடங்குகள் செய்யப்படும் இடத்தில், சுத்தமான இடத்தில் ஒரு சிறிய கல் நிறுவப்படும். இது முதல் நாளன்று மயானத்தில் நடைபெற்ற இறுதிச் சடங்குகளுக்குப் பிறகு அன்றே செய்யப்படுகிறது. இறந்தவரின் ஆன்மா ஓய்வெடுக்கும் இடமாக நம்பப்படும் அந்த சிறிய கல்லின் முன்னிலையில்தான் பன்னிரண்டு நாட்கள் சடங்குகளும் செய்யப்படும். அதன் அருகில் இரண்டு சிறிய யாகக் குண்டங்ககளும் அமைக்கப்படும்.

**209)** முதல் நாளன்று கல்லை ஊன்றி பாஷாண ஸ்தாபனம் செய்யாவிடில் மூன்றாம் நாளன்று கல்லினால் சம்பிரதாயமாக இரண்டு குண்டம் அமைத்து ஆன்மாவை கல்லில் ஆவாஹனம் செய்வார்கள். இப்படியாக கல் ஊன்றி செய்யப்படும் சடங்கை முதல் நாளில் ஆரம்பிக்காவிடில் ஒற்றைப் படையில் ஒன்று, மூன்று, ஐந்து, ஏழு அல்லது ஒன்பதாம் நாளன்று துவக்கி அனைத்து முந்தைய நாட்களுக்குமான சடங்கையும் சேர்த்து அன்றே செய்து முடிப்பார்கள்.

**210)** கருட புராணத்தின்படி, இறந்தவரின் உடலை விட்டு வெளியேறிய ஜீவாத்மா, முதல் பன்னிரண்டு நாட்களுக்கு விண்வெளியில் 'பிரேதம் ' எனப்படும் புதிய உடலுடன் இருக்கும், இது கர்த்தாவினால் செய்யப்படும் பத்து நாட்கள் சடங்குகள் மூலம் உருவாகிறது. இந்த புதிய உடல் - பிரேதம் என்பதை அந்த ஜீவாத்மாவை கட்டுப்பாட்டில் வைத்துள்ள வசுக்கள், ருத்திரர்கள் மற்றும் ஆதித்தியர்களினால் அடையாளம் காண முடியும். அந்த உடலோடுதான் ஒரு ஜீவாத்மாவானது யமபுரியை நோக்கி பயணிக்க முடியும்.

**211)** சடங்குகளை செய்யும் கர்த்தா ஒவ்வொரு நாளும், குறிப்பிட்ட மந்திரங்களை உச்சரித்து ஆன்மாவை, பிரதிஷ்டை செய்யப்பட்டு உள்ள கல்லில் நுழைந்து, தாம்

தரும் படையல்களை (பிண்டம்) ஏற்றுக் கொள்ளும்படி வேண்டுவார். கர்த்தாவை வழி நடத்தும் புரோஹிதர், இறந்த ஆன்மாவை முறையாக மதிக்கவும், சடங்கின் செயல் திறனை உறுதிப்படுத்த சரியான மந்திரங்களை உச்சரிப்பதை உறுதி செய்கிறார்.

**212)** இறந்தவர்களுடைய பெண் அல்லது மருமகள் கல் ஊன்றிய இடத்தில் வந்து, அங்குள்ள ஸ்நான அறையில் ஸ்நானம் செய்து விட்டு, சொட்ட சொட்ட ஈரத்துடன் வந்து அங்கு வைக்கப்பட்டு உள்ள அடுப்பை மூட்டி, பிண்டம் (அரிசி போட்டு பொங்கிய சாதம்) தயாரித்து, புரோஹிதர் கூறியபடி சடங்குகளை செய்து விட்டு அந்த அடுப்பையும் பாத்திரங்களையும் தேய்த்து அலம்பி அங்கேயே வைக்க வேண்டும். அந்த பாத்திரங்களை வேறு எந்த சடங்கிற்கும் பயன்படுத்தக் கூடாது

**213)** வசுக்கள், ஆதித்யர்கள் மற்றும் ருத்ரர்களின் காவலில் இருக்கும் பிரேத வடிவிலான ஜீவாத்மா சடங்குகள் நடைபெறும் இடத்திற்கு தினமும் அழைத்து வரப்பட்டு, தற்காலிகமாக கல்லுக்குள் நுழைந்து அமர்ந்து கொண்டு அங்கு நடைபெறும் சடங்குகளை ஏற்றுக் கொள்ள அனுமதிக்கப்படும்.

**214)** பத்தி 219 இல் கூறப்பட்டு உள்ளபடி (கருட புராணம்), சடங்கின் முதல் பத்து நாட்களில், பிரேதமானது தண்ணீரும் எள்ளும் கலந்த அரிசியை (பிண்டம்) மனதார ஏற்றுக் கொள்கிறது. பிண்டத்தை தற்காலிகமாக பிரேதம் தங்கியிருக்கும் கல்லின் முன் வைத்தவுடன், அவற்றை பிரேதம் ஏற்றுக் கொள்ளத் துவங்கும்போது அது ஒரு உருவை- பிரேதம்- அடையத் துவங்கும். அந்த உருவில்தான் அதனால் பிண்டத்தை ஆவாஹிக்க முடியும். பிரேதம் எனப்படும் அந்த உடலை அந்த ஜீவாத்மாவை கட்டுப்பாட்டில் வைத்துள்ள வசுக்கள், ருத்திரர்கள் மற்றும் ஆதித்தியர்களினால் அடையாளம் காண முடியும்.

**215)** அதே சடங்கை பன்னிரண்டு நாட்களும் அதே முறையில் செய்வார்கள். அந்த கர்மாக்களின் தொடர்ச்சியாக பதிமூன்றாம் நாளன்று குடும்பத்தினரின் துயரத்தை நீக்கிக் கொள்ள சுபஸ்வீகாரம் எனும் சடங்கு செய்து முடிக்கப்படுகின்றது. அதாவது அபர காரியம் என்பது சுப காரியத்துடன் முடிவடைகிறது.

**216)** கல் ஊன்றிய பிறகு அந்த கல்லையே ஜீவனாக பாவித்து தினமும் வாஸோதகம் எனப்படும் துணி பிழிந்த ஜலத்தாலும், திலோதகம் எனப்படும் எள்ளு தண்ணீராலும் தர்ப்பணம் செய்வார்கள்.

**217)** கர்மாவைத் துவக்கிய முதல் நாள் முதல் அடுத்த பத்து நாட்களும் அதன் குடும்பத்தினரால் போடப்படும் எள்ளையும் தண்ணீரையும், பிண்டத்தையும் அங்கிருந்தவாறே அது பெற்றுக் கொண்டு மெல்ல மெல்ல முழுமையான சூட்சும உடலை அடையத் துவங்கும். அதை பிண்ட உடல் என்றும் கூறுவார்கள்.

**218)** முதலில் குடும்பத்தின் இளையவர்தான் பிண்டம் போடத் துவங்க வேண்டும். அவரைத் தொடர்ந்து எத்தனை சகோதரர்கள் இருந்தார்களோ அத்தனை சகோதரர்களும் விட வேண்டும்.

**219)** வாஸோதகம் மற்றும் திலோதகத்தில் எள்ளும் தண்ணீரும் தர்பைப் புல்லின் மீது பட்டவாறு சமர்பிக்கப்படுகிறது.

**220)** வசுவோதகம் மற்றும் திலோதகம் சடங்கு முடிந்த பின்னரே சாதத்திலான பிண்டம் சமர்ப்பிக்க வேண்டும். தினமும் ஒரு இளநீர் காயும் அவற்றோடு வைக்க வேண்டும். அப்படி செய்யப்படும் தர்ப்பணத்தால் ஜீவாத்மாவின் தாகம் அடங்கும். கர்மாவில் அரிசி சாதம், தர்பை, எள் மற்றும் தண்ணீர் என்பன இந்த சடங்கில் முக்கியமானவை ஆகும்.

**221)** பிண்டம் போடும் இடமே மந்திர சக்திகளினால் ஆன புனிதமான இடமாக, தெய்வீக பூமியாக இருக்கும். ஆகவேதான் அங்கு தர்பை புல்லையும் போட்டு வைத்து இருப்பார்கள். தர்பையைப் பயன்படுத்தாத சடங்குகளே கிடையாது.

**222)** ஒரே இடத்தில் தான் பத்து நாட்களும் பிண்டம் போட வேண்டும். முதல் நாள் எந்த தானியத்தில் பிண்டம் செய்தோமோ அதே தானியத்தில் தான் பத்து நாட்களும் செய்ய வேண்டும் என்றாலும் அரிசியில் சமைத்த சாதத்தையே போடுவது நல்லது. பிண்டம் போட்டு முடித்தப் பின்னர் மறுபடியும் ஸ்நானம் செய்து விட்டு தான் வீட்டிற்குள் செல்ல வேண்டும்.

**223)** ஒரு விளக்கு அங்கு பத்து நாட்களும் 24 மணி நேரமும் எரிந்து கொண்டிருக்க வேண்டும். நாய், பூனை போன்ற பிராணிகள் அங்கு வராமல் பார்த்து கொள்ள வேண்டும். குண்டத்தின் மீது இறந்தவரின் பழைய வேட்டியையோ அல்லது புடவையையோ போட்டு மூடி வைக்க வேண்டும்.

**224)** முதல் நாளில் மூன்று தடவை, அடுத்த நாள் நான்கு தடவை, அதற்கு அடுத்த நாள் ஐந்து தடவை எனப் படிப்படியாக வாஸோதகம், திலோதகம் தர்ப்பணத்தை அதிகரித்துக் கொண்டே போய் தர்ப்பணத்தை செய்ய வேண்டும். பத்தாம் நாளன்று பன்னிரண்டு முறை செய்யப்படும் சடங்கை ஏகோத்ர விருத்தி ஸ்ரார்தம் என்பார்கள். ஏகோத்ர விருத்தி ஸ்ரார்தம் செய்வதன் மூலம், இறந்தவர்களின் ஆன்மா சாந்தியடைந்து, முக்தி அடையும் என்று நம்பப்படுகிறது. இதுவும் சிலர் குடும்பங்களில் மாறுபட்டு இருக்கும். அதையும் புரோகிதர் கூறுவார்கள்.

**225)** அதை போலவேதான் நவ சிராத்தம் எனும் சடங்கையும் 11 ம் நாள் வரை ஒற்றை படை நாட்களில் செய்வார்கள் (1,3,5,7,9,11 நாட்களில் செய்ய வேண்டும்). நவ சிராத்தம் செய்வதின் மூலம் இறந்தவர்களின் ஜீவாத்மா சாந்தி அடைந்து , பித்ரு லோகத்தில் மன நிறைவோடு இளைப்பாறுவார்கள் என்பது தாத்பர்யம். அதை செய்த பின் சடங்கு செய்த புரோகிதருக்கு அரிசி தானம் செய்வார்கள்.

**226)** இப்படியாக பதினோரு நாட்களும் தினமும் தர்பை மூலம் தரப்படும் எள், தண்ணீர், பிண்டம் போன்றவற்றை இறந்து போனவரது ஜீவாத்மா மானசீகமாக உண்டதும், கல்லில் ஆவாஹிக்கப்பட்டு இருக்கும் ஜீவாத்மா, அது வாழ்ந்திருந்த அதே தோற்றத்திலான சூட்சும உடலை படிப்படியாக அடைகிறது.

**227)** இதைக் குறித்து கருட புராணம் அழகாகக் கூறுகிறது. கர்த்தாவினால் (சடங்கு செய்பவர்) இறந்தவருக்கு முதல் நாள் படைக்கப்படும் பிண்டத்தினால் ஜீவாத்மாவிற்கு தலை உண்டாகிறது. இரண்டாம் நாள் போடும் பிண்டத்தில் கழுத்தும், தோளும் உண்டாகும்;

**228)** மூன்றாம் நாள் போடப்படும் பிண்டத்தால் கைகளும் மார்பும் உண்டாகும்; நான்காம் நாள் போடப்படும் பிண்டத்தால் வயிறு உண்டாகும்; ஐந்தாம் நாள் போடப்படும் பிண்டத்தால் உந்தி (தொப்புள்) உண்டாகின்றது.

**229)** ஆறாம் நாள் போடப்படும் பிண்டத்தினால் பின்புறம் உள்ள பிரஷ்டம் தோன்ற; ஏழாம் நாள் போடப்படும் பிண்டத்தினால் குய்யம் எனப்படும் ஆண் மற்றும் பெண் குறிகளும், எட்டாவது நாள் போடப்படும் பிண்டத்தினால் தொடைகளும் உண்டாகின்றன.

**230)** ஒன்பதாம் நாள் போடப்படும் பிண்டத்தினால் கால்கள் ஏற்பட, பத்தாவது நாள் போடப்படும் பிண்டத்தினால் பூரண சரீரம் உருவாகின்றது.

**231)** பதினோரு நாட்களும் தரப்படும் எள், தண்ணீர், பிண்டம் போன்றவற்றை இறந்து போனவரது ஜீவாத்மா மானசீகமாக உண்டதும் அங்குள்ள பித்ரு தேவதைகள், தேவலோகத்தில் உள்ள நம் மூதாதையர்களுக்கும் ஏற்ப ஆகாரமாக அவற்றை மாற்றி தேவலோகத்தில் கொண்டு சென்று கொடுத்து அவர்களை திருப்தி அடைய வைக்கிறது.

**232)** தனக்கு தரப்பட்ட பிண்டங்களால் முழுமையான உருவத்தைப் பெற்றிடும் ஜீவாத்மா பதினோராவது நாள், தான் வாழ்ந்திருந்த வீட்டிற்கு வந்து, உயிரோடு தான் இருந்தபோது வீட்டில் நிகழ்ந்த அனைத்து சம்பவங்களையும், நிகழ்வுகளையும் நினைத்துப் பார்க்குமாம்.

**233)** உடலின் மீதான பற்றற்ற நிலைக்கு சென்று மனம் சாந்தி அடைந்து, கர்மாக்களின் விளைவுகளை எதிர் கொள்ளும் மன நிலைக்கு சென்று விடும் ஜீவாத்மா பன்னிரண்டாம் நாள் கர்மாக்கள் முடிந்ததும் வஸுக்களிடம் இருந்து விலகி யமகணங்களின் கட்டுப்பாட்டிற்குள் சென்று விடும். அதன் பின்னரே அந்த ஜீவாத்மா யமலோகத்துக்கு அழைத்துச் செல்லப்படும்.

**234)** அந்த ஜீவாத்மா சூட்சும உடலை முழுமையாக அடையும்வரை ஏன் காத்திருப்பார்கள் என்றால், சொர்க்க நரகங்களில் அவை தமக்கு தரப்படும் தண்டனைகளையும், சுகபோகங்களையும் மனித உடல் அனுபவிக்கும் அதே

உணர்வுகளுடன் இருந்தவாறு அனுபவிக்க வேண்டும் என்பதற்காக ஏற்படுத்தப்பட்டு உள்ள நியதி ஆகுமாம்.

## ஜீவாத்மாவின் பயணம் -9 (a) பன்னிரண்டு நாள் சடங்குகள் (2 ஆம் நாள் முதல் 12 ஆம் நாள் வரை) - அவற்றின் காரணங்கள்

**235)** இந்து சடங்குகளில், ஒற்றைப்படை நாட்கள் மங்களகரமானதாகக் கருதப்படுகின்றன. பாஷாண ஸ்தாபனம் முதல் நாளில் செய்யப்படாமல் வேறு எந்த ஒற்றைப்படை நாளுக்கும் ஒத்தி வைக்கப்பட்டால், தவற விட்ட நாட்களில் செய்யப்பட வேண்டிய அனைத்து சடங்குகளும் முதலில் செய்து முடிக்கப் படவேண்டும், அப்படி செய்வதின் மூலமே பாஷாண ஸ்தாபனத்தில் ஏற்பட்ட தாமதம் காரணமாக சடங்கின் எந்தப் பகுதியும் விடுபடாமல் இருக்குமாறு பார்த்துக் கொள்ள முடியும்.

**236)** எந்த ஒரு நிகழ்ச்சியிலும், காரியங்களிலும் முதலில் வணங்க வேண்டியது வினாயகர் பெருமானே. அவருக்கு பிறகே மற்ற தெய்வ ஆராதனைகள் துவங்கும். அதை போலவேதான் எண்களில் முதலில் துவங்குவது ஒன்று எனும் ஒற்றைப் படை எண் ஆகும், அதை தொடர்வதே பிற எண்கள். இதனால் ஒன்று என்பது வினாயகப் பெருமானுக்கு இணையான எண் எனக் கருதி, வைதீக காரியங்களில் ஒற்றைப் படை அல்லது அதன் அடிப்படையில் வரும் ஒற்றைப் படை எண் தினங்களில் காரியங்களை துவங்குவார்கள். முன் காலங்களில் கர்மாக்களில் இதை கடைபிடித்தார்கள் என்பதாக கருத்து உள்ளது.

**237)** முன் காலத்தில் வெளி தோட்டத்திலோ அல்லது வீட்டின் பின்புறம் இருந்த தனி அறையிலோ கல் ஊன்றி காரியங்களை செய்வார்கள். ஆனால் தற்காலத்தில் விஸ்தாரமான வீடுகள் இல்லாமல் அடுக்கு மாடி குடியிருப்புக்களில் இருப்பவர்கள், மற்றவர்களுக்கு ஆட்ஷேபணை இல்லை என்றால், படிக்கட்டுகளுக்கு கீழே உள்ள இடத்தில், அல்லது பின்புறம் தென்னை மரம்

இருந்தால் அதன் அடியிலும் வைத்து சடங்குகளை செய்கின்றார்கள்.

**238)** ஆனால் மாடி குடியிருப்புக்களில் உள்ளவர்களால் ஏற்றுக் கொள்ளப்படுவதில்லை என்பதினால் ஒன்பதாம் நாளன்று சடங்கு செய்ய வாடகைக்கு இடம் தரும் ஏதாவது ஒரு மண்டபத்தில் பாஷாண ஸ்தாபனம் செய்து ஒன்பது நாட்களுக்குமான காரியங்களை ஒரே நாளில் செய்து விட்டு, 10, 11 மற்றும் 12 ஆம் நாள் காரியங்களையும் அங்கேயே சென்று செய்து விட்டு வருகின்றார்கள். 13 ஆம் நாள் சடங்கான சுபாசுவீகாரத்தை வீட்டில் செய்கின்றார்கள்.

**239)** கல் ஸ்தாபனம் செய்யப்பட்ட இடமே அந்த சடங்குகள் செய்து முடிக்கப்படும் வரை மந்திர சக்திகளினால் ஆன, தெய்வீகம் நிறைந்திருக்கும் வகையிலான புனித கைலாயம் மற்றும் இந்திர லோகமாக அந்த ஜீவாத்மாக்களுக்கு இருக்கும் என்பது ஐதீகம். இறந்து போனவருடைய ஜீவாத்மா அங்கு கல்லின் உள்ளே அமர்ந்திருக்கும். கல் ஊன்றிய இடத்தில் மந்திரங்களை ஓதி அந்த ஜீவாத்மாவை அதில் செலுத்தி வைத்ததும் அந்த இடமே அதன் அரண்மனை போல மாறி விடும். ஆகவே அங்கு செய்யப்படும் சடங்குகளை ஜீவாத்மா மனதார ஏற்றுக் கொள்கின்றது.

**240)** ஊன்றப்பட்டு இருக்கும் கல் ஜீவாத்மாவின் சிம்மாசனம் போன்றது ஆகும். அந்த கல் அதற்கு சிறை சாலை போன்றது அல்ல. அதனால் ஜீவாத்மாவினால் எங்கு வேண்டுமானாலும் சுற்றித் திரிய முடியும் என்றாலும், அது எங்கு சென்றாலும் வசுக்கள், ஏகாதச ருத்திரர்கள் மற்றும் ஆதித்யர் என்கின்ற துவாதசாதித்யர் அதை சூழ்ந்து கொண்டவண்ணமே இருப்பார்கள். அவர்களை தாண்டி அந்த ஜீவாத்மாவினால் தனியாக எங்கும் செல்ல முடியாது.

**241)** அந்த ஜீவாத்மாவும் தமக்கு அந்தஸ்தை தரும் வகையில் செய்யப்படும் சடங்குகளை மனதார ஏற்றுக் கொண்டு தாம் வாழ்ந்திருந்த குடும்பத்துக்கு மனதார ஆசிகளை அளிக்குமாம்.

**242)** அந்த கல்லில் ஆவாஹனம் செய்யப்பட்ட ஜீவாத்மாவானது அந்த கல்லில் இருந்து வெளியேறிச் செல்லும் இடைப்பட்ட காலத்தில் அந்த கல்லுக்குள் வேறு

எந்த ஜீவாத்மாவினாலும் புகுந்து கொள்ள முடியாது. ஆவாஹிக்கப்பட்ட அந்தக் கல் அதன் வீடு ஆகும்.

**243)** பெண்கள் எதனால் ஈரப் புடவையுடன் பிண்டம் சமைக்கிறார்கள்?

**244)** பண்டை காலங்களில் நதிக்கரையில் அல்லது வேறு நீர் நிலைகளில் கர்மாக்களை செய்வார்கள். அப்போது அவர்கள் அங்குள்ள நதியில் குளித்து விட்டு காரியங்களை செய்வார்கள். ஆகவே நதி அல்லது நீர் நிலைகளில் குளித்தப் பின் வீட்டில் இருந்து எடுத்து வந்திருந்த மாற்றுத் துணியையும் நனைத்து விட்டு காய வைத்து அதை உடுத்திக் கொண்டு காரியத்தை துவக்க கால தாமதம் ஏற்படும். உடைகளை மாற்றிக் கொள்ள மறைவிடங்களும் இல்லாத காலம் அது.

**245)** வீட்டில் இருந்து கொண்டு வந்த துணிகளை நனைக்காமல் மாற்றிக் கொள்வது கூடாது. ஏன் என்றால் தீட்டு வீட்டில் இருந்து வந்த பின் தீட்டோடு காரியங்களை செய்யக் கூடாது. அதனால் பிண்டம் சமைக்கும் முன் குளிப்பது அவசியம். ஆகவே இவை அனைத்தையும் மனதில் கொண்டே ஈரப் புடவையுடன் சடங்கை செய்ய வேண்டும் என்ற விதி வைக்கப்பட்டு உள்ளது.

**246)** இதற்கு ஓரளவுக்கு விஞ்ஞான அடிப்படைக் காரணமும் உள்ளது. மன வேதனையில், துக்கத்தின் விளைவாக ரத்தம் கொதிப்படைந்து உடல் சூடாகவே இருக்கும். கர்மாக்களை செய்யும்போது மனம் அமைதியாக இருக்க வேண்டும், மனக்கட்டுப்பாடும் தேவை. ஈரத்துடன் இருக்கையில் உடலின் சூடு குறையும், எண்ண அலைகள் கட்டுப்பாட்டில் இருக்கும் என்பதினால் இதை சாஸ்திரங்களில் ஒரு விதியாக வைத்து உள்ளார்கள்.

**247)** 11வது நாள் சடங்குகளில் ஜீவாத்மாவின் உணர்ச்சி பூர்வமான வருகை, ஜீவாத்மா யம லோகத்திற்கு செல்லும் இறுதி கட்டத்தில் பெறும் ஒரு முக்கியமான மன மாற்றத்தைக் குறிக்கிறது. 11 ஆம் நாள் சடங்கு முடிந்ததும், ஜீவாத்மா தனது முந்தைய பூமியிலான வாழ்க்கைக்கு இனி திரும்பிச் செல்ல முடியாது என்பதை உணர்ந்து கொள்ளும்; எனவே, அது தான் சுமந்து சென்ற உணர்வுகளை உதறி விட்டு, யம லோகத்தை நோக்கி

கடினமான பயணத்தை மேற்கொள்ள மனதளவில் தயாராகி விடும்.

## ஜீவாத்மாவின் பயணம் -10 பன்னிரண்டு நாள் சடங்குகளில் பத்தாவது நாளன்று நடைபெறும் சடங்குகள்

**248)** பத்தாம் நாள் காரியம் என்பது, ஒருவர் இறந்த பத்தாவது நாளில் செய்யப்படும் சடங்குகளைக் குறிக்கும். இதில், இறந்தவரின் ஆன்மா சாந்தியடையவும், அவரைச் சார்ந்தவர்கள் துக்கத்தில் இருந்து மீண்டு வரவும் பல்வேறு சடங்குகள் செய்யப்படுகின்றன. இந்த நாளில், நித்திய விதி, பங்காளி தர்ப்பணம் (குழி தர்ப்பணம்), ப்ரபூத பலி, பாஷாண உத்தாபனம், சாந்தி ஹோமம், ஆனந்த ஹோமம், சாரு ஸம்பாவனை, அப்பம், பொரி ஓதியிடல் போன்றவை பத்தாவது நாளன்று நடைபெறும் சடங்கில் முக்கியமானவை ஆகும்.

**249)** மரணம் அடைந்தவரின் ஜீவாத்மா முதல் மூன்று நாள் தண்ணீரிலும், அதற்கு அடுத்த மூன்று நாட்களுக்கு அக்னியிலும், அதற்கு அடுத்த மூன்று நாட்கள் விண் வெளியிலும் வசுக்கள், ஏகாதச ருத்திரர்கள் மற்றும் ஆதித்யர்களுடன் வசிக்கிறது. அது வசிக்கும் தண்ணீரும், அக்னியும் நமது கண்களுக்கு தெரிவதில்லை. அவை நமது கண்களுக்கு புலப்படாத வகையில், ஜீவாத்மாவிற்கு மட்டும் தெரியும் வகையில் விண்வெளியில் உள்ளன.

**250)** ஒன்பது நாட்களிலும், ஜீவாத்மா வந்து தங்கி சடங்குகளை ஏற்றுக் கொள்ள அமைக்கப்பட்ட கல்லில் தங்கி, பிண்டத்தை பெறுவதற்காக பூமிக்குக் அழைத்து வரப்பட்டு, வசுக்களுடன் மீண்டும் விண்வெளிக்குத் திரும்பி விடும். ஆனால் பத்தாவது நாள் பல மணி நேரம் அங்கு தங்கி, அன்று செய்யப்படும் அனைத்து சடங்குகளிலும் கலந்து கொள்ள அனுமதிக்கப்படுகிறது. எனவே, பத்தாவது நாள் சடங்கு அதிக முக்கியத்துவம் பெறுகிறது.

**251)** முதலில் கர்த்தாக்கள் துணி பிழிந்த தண்ணீரால் செய்யப்படும் வாஸோதகமத்தை 30 முறையும், எள்ளு தண்ணீரால் செய்யப்படும் திலோதகம் எனப்படும் நித்ய விதியை 75 முறையும் செய்வார்கள்.

**252) குழி தர்ப்பணம்:-** பத்தாம் நாள் சடங்கு அன்று இறந்தவரின் பங்காளிகள் வந்து பத்து தினங்களுக்கான குழி தர்ப்பணம் செய்ய வேண்டும். குழி தர்ப்பணம் என்பது என்ன? கர்மா நடைபெறும் இடத்தில் தர்ப்பணம் செய்யும் பங்காளிகள் அந்த இடத்தில் கொட்டப்பட்ட மண் தரையில் சின்ன குழி போல கையால் தோண்டி, அந்த குழிக்குள் எள்ளும் தண்ணீரும் விட்டு தர்ப்பணம் செய்வார்கள். முந்தைய பத்தி ஒன்றில் கூறியது போல, இந்து பாரம்பரிய நம்பிக்கை என்னவென்றால், குழி தர்ப்பணம் செய்யப்படும் குழிகளில் ஊற்றப்படும் நீரின் உயிர் சக்திகள், தரையில் ஆழமாக ஊடுருவி, நிலத்தடி நீரில் கலக்கின்றன, அந்த நிலத்தடி நீர் பூமிக்குள் ஓடும் கடல் அல்லது நதியின் நீரில் கலக்கின்றது. அவற்றிலிருந்து ஆவியாகும் நீர், சடங்குகளில் செய்யப்படும் பிரார்த்தனைகளின் சக்திகளால், பித்ரு லோகத்தில் உள்ளவர்கள் மட்டுமே தங்கள் தாகத்தைத் தணித்துக் கொள்ளும் அளவிலான, நமது கண்களுக்கு தெரியாத நீர் சக்திகளாக மாறுகின்றது. இந்த நம்பிக்கைகள் அனைத்தும் சில ஆகமங்கள் மற்றும் வேத நூல்களை அடிப்படையாகக் கொண்டவை.

**253)** பண்டைக் காலத்தில் இறந்தவர்களின் பங்காளிகள் நதி மற்றும் நீர் நிலைகளில் தர்ப்பணம் செய்வார்கள். அனைத்து இடங்களிலும் நதிகளும் நீர் நிலைகளும் இருப்பது இல்லை. அதனால்தான் பண்டை காலத்திலும் கூட நதிக்கரை, கடற்கரை இல்லாத பல இடங்களில் பூமியிலே சின்ன குழியை தோண்டி பூமாதேவியிடம் அந்தக் குழியிலே ஊற்றப்படும் தர்ப்பண நீரை பூமிக்குள் ஓடும் நதியுடன் சென்று கலந்து விட வேண்டும் என வேண்டிக் கொண்டு செய்யப்படும் சடங்காக அதை வைத்திருந்தார்கள். அதன் விளைவாக பண்டை காலத்திலும் நீர் நிலைகள் இல்லாத இடங்களில் குழி தர்ப்பணம் செய்யலாம் என விதி இருந்தது.

**254)** சஞ்சயனத்தில் இறந்தவரது சாம்பல் மற்றும் எலும்பு இரண்டுமே நதி மற்றும் நீர் நிலைகளில் கரைக்கப்பட்டதும், கண்களுக்கு புலப்படாமல் இருக்கும், இறந்தவர் உடலின் ஜீவ அணுக்கள் பூமிக்குள் ஊடுருவி அங்குள்ள நீரில் கலந்து பயணித்தபடி இருக்கும். அதே நேரத்தில் பங்காளிகளினால் குழி தர்பணத்தில் விடப்படும் நீரின் ஜீவ அணுக்களும் பூமிக்குள் ஊடுருவி அங்குள்ள நீரில் கலந்து விடும். பூமிக்குள் உள்ள நீரில் ஏற்கனவே பயணித்துக் கொண்டு உள்ள இறந்தவரது ஜீவ அணுக்களை, பங்காளிகள் விட்ட நீரின் ஜீவ அணுக்கள் ஸ்பரிசித்து அவற்றுக்கு தாக சாந்தி தரும்போது அந்த உணர்வுகள் வசுக்கள் கட்டுப்பாட்டில் உள்ள ஜீவாத்மாவின் தாகத்தை தணிக்கின்றது.

**255)** அதனால்தான் நதிகள் மற்றும் ஓடும் நீர் நிலையில்தான் இறந்தவர்களுக்கு தர்ப்பணம் செய்து எள்ளும் தண்ணீரும் ஊற்ற வேண்டும் என்பது சாஸ்திர விதியாக இருந்தது. இந்த நம்பிக்கைகளும் சில ஆகமங்கள் மற்றும் வேத நூல்களை அடிப்படையாகக் கொண்டவை.

**256)** தர்பண நீரின் உயிர் அணுக்கள் வான் வெளிக்கு சென்று, யமபுரியை நோக்கி பயணிக்கும் ஜீவாத்மாவின் தாகத்தை தணிப்பதோடு அல்லாமல், ஜீவாத்மா தான் தனி நபர் அல்ல, இறந்த பின்னரும் தனக்கு தன் குடும்பமும் தனது பங்காளிகளின் துணையும் உள்ளது என்ற மன தைரியத்தைப் பெறும். இது சாஸ்திரங்களில் கூறப்பட்டுள்ள இந்த சடங்கின் தாத்பர்யத்தில் உள்ள ஆழமான ஆன்மீக தத்துவம் ஆகும்.

**257)** வான் வெளியில் கோடிக்கணக்கான ஜீவ அணுக்கள் மிதந்தபடி உள்ளன. அவற்றில் இருந்து எப்படி குறிப்பிட்ட ஜீவாத்மா குறிப்பிட்ட குடும்பத்தினரின் தர்ப்பண நீரின் ஜீவ அணுக்களை கிரகித்துக் கொள்ள முடியும் என்ற கேள்வி எழலாம். உண்மை என்ன என்றால் இதுதான் தெய்வீகம் என்பது. காந்தத்தைப் போன்ற தன்மை கொண்ட கோடிக்கணக்கான ஜீவ அணுக்கள் வான்வெளியில் இருந்தாலும், குறிப்பிட்ட ஒரு ஜீவாத்மா அதன் குறிப்பிட்ட கர்மா செய்பவர் மற்றும் பங்காளிகளின் தர்ப்பண நீரின் ஜீவ அணுக்களை மட்டுமே தன்னுள் இழுக்க

முடியும், அவற்றால் மற்றவர்களுடைய தர்ப்பண நீரின் ஜீவ அணுக்களை அணுகக் கூட முடியாதாம்.

**258)** இது நமது எண்ணங்களுக்கு அப்பாற்பட்ட, நமக்கு புரியாத, விசித்திரமான தெய்வீக ஆற்றல் ஆகும்.

**259)** தர்ப்பணத்தில் தண்ணீர் ஊற்றும்போது அதை வலது கை ஆள் காட்டி விரல் மற்றும் கட்டை விரலின் இடுக்கு வழியே ஊற்றுகிறோம். ஒவ்வொருவரது கையிலும் வலது கை ஆள் காட்டி விரலுக்கும், கட்டை விரலுக்கும் இடையே உள்ள இடைப் பகுதியில் ஓடும் ரேகைகளை பொதுவாக பித்ரு பூம்ய ரேகைகள் என்பார்கள்.

**260)** பங்காளிகள் மந்திரங்களை ஓதி ஊற்றும் தர்ப்பண நீரானது அவர்களது கைகளில் உள்ள பித்ரு பூம்ய ரேகைகள் வழியே ஓடிச் செல்லும்போது அந்த பூம்ய ரேகைகளின் ஸ்பரிசங்களை தன்னுள் அடக்கிக் கொண்டு அது பித்ருக்களுக்கான நீராக மாறி விடுமாம். அதனால்தான் ஜீவ அணுக்கள் அதன் பங்காளிகளின் தர்ப்பண நீரை மட்டுமே தன்னுள் இழுக்க முடியும் என்ற தெய்வ நியதி நியாயமாகவே உள்ளது.

**261) ப்ரபூத பலி:-** ப்ரபூத பலி என்பது சாதம், அடை உருண்டைகள் மற்றும் அகத்திக் கீரை போன்றவற்றை ஜீவாத்மா தற்காலிகமாக குடி இருந்த கல் (பாஷாண உத்பாதனம் செய்யப்பட்ட கல்) முன்னால் கொட்டுவதாகும். அரிசியில் செய்த அன்னம், உப்பு போடாமல் செய்த 11 இட்லி 11 அடை, 11 அப்பம், 11 முறுக்கு, 11 வடை போன்றவற்றை கல் ஊன்றிய இடத்தின் அருகில் படைப்பதையே பத்து கொட்டுவது அல்லது ப்ரபூத பலி என்கிறார்கள். இந்த சடங்கில் தரப்படும் உணவுப் பொருட்கள் ஒவ்வொரு குடும்பத்துக்கும் மாறுபட்டு இருக்கலாம்.

**262)** ஒத்தைப்படை கோடுகள் வரும்படி கோலம் போட்டு (வீடுகளில் சாதரணமாக அப்படி கோலம் போடுவது இல்லை), துணியின் நுனிப் பகுதி தெற்கு நோக்கி இருக்குமாறு வைத்து, அதன் மீது தர்ப்பைகளை பரப்பி வைத்து, எள்ளும் நீரும் விட்டு, அதன் மீது அன்னம், அப்பம், கொழுக்கட்டை, லட்டு, முறுக்கு, நெய், தேன், தயிர் போன்ற அனைத்தையும் வைப்பர். அதன் மேல் மீண்டும் எள்ளும், நீரும் விட்டு, தமது குலத்தை தழைக்க வைக்க வேண்டும்

என்று வேண்டிக் கொள்வார்கள். பாத்திரங்களை எள் நீரால் அலம்பி, நிமிர்த்தி வைத்து, தெற்கு முகமாய் பார்த்தபடி நமஸ்கரிக்க வீட்டு காரியங்கள் முடிவடையும்.

**263)** முதல் நாள் அன்று இரவு உப்பில்லாமல் சமைக்கப்பட்டு பத்தாம் நாளன்று அங்கு எடுத்து வந்துள்ள உணவை இறந்தவரின் பங்காளிகள் உப்பில்லாத சாப்பாடு எனும் பெயரில் அந்த கல் முன்பாக போடுவார்கள். அந்த உப்பில்லாத உணவை பெற்றுக் கொள்ளும் ஜீவனானது, ஐயோ இந்த உப்பில்லாத சாதத்தை உண்பதை விட வேறெங்காவது போய் விடலாம் என்று உலக பந்தத்தை அறுத்துக் கொண்டு செல்லும் மன நிலையை அதற்கு அளிக்கும் என்று இந்த சடங்கை வைத்து உள்ளார்கள். இந்த சடங்கும் ஒவ்வொரு குடும்பத்துக்கு, குடும்பம் மாறுபட்டு இருக்கலாம்.

**264) பாஷாண உத்தாபனம்**: அதன் பின்னர் கர்மா செய்பவரை தவிர அனைவரையும் வெளியே அனுப்பி விட்டு, கல்லை எடுக்க தானங்கள் செய்து, பித்ருவை போக வேண்டிய இடத்துக்கு போகச் சொல்லி பிரார்த்தனை செய்த பின்னர், கண்களை மூடிக் கொண்டு, ஆவாஹனம் செய்து பூமியிலே ஊன்றிய கல்லை மீண்டும் வெளியில் எடுத்து விடுவார்கள். அதாவது அங்கு வாசம் செய்து கொண்டிருந்த ஜீவனை வெளியில் எடுத்து விடுவார்கள் என்பதான ஐதீகம் ஆகும். கற்களை எடுத்தப் பின் கண்களை திறக்க வேண்டும். அங்கும் இங்கும் பார்த்தபடி மனம் அலை பாயாமல் இருக்க வேண்டும் என்பதற்காகவே கர்மா செய்பவர் கல்லை எடுக்கும் முன்னர் கண்களை மூடிக் கொள்கின்றார்.

**265)** இறந்தவரின் உடல் வைக்கப்பட்டிருந்த இடத்தில் இருந்து கல்லை அகற்றும் இந்த சடங்கையே பாஷாண உத்தாபனம் என்பார்கள். அவற்றை துணியில் வைத்து கையலம்பிக் கொண்டு, கல் மீது ஒட்டிக் கொண்டு இருந்த மண், தானியங்கள் இவற்றை எடுத்துக் கொண்டு போய் எல்லாவற்றையும் ஒரு குழியில் போட்டு அதன் மீது நெல்லையும் சிறிது பசுவின் சாணத்தையும் கொட்டி விட்டு மூடி விடுவார்கள். இதே போல நதி கரையில் காரியங்களை செய்வார்கள். பெரியோரை வலம் வந்து பிரார்த்தனை

செய்த பின் தாடி மீசைகளை மழித்த பின் குளித்து விட்டு வீடு திரும்புவார்கள்.

**266) யதாஸ்தானம்:** பத்தாவது தினத்தன்று யதாஸ்தானம் செய்து (முன்னிருந்த இடம் அல்லது சம்பந்தப்பட்ட இடம் என்று பொருள்) செய்து வெளியில் எடுக்கப்பட்ட ஜீவாத்மாவானது, கட்டை விரல் போன்ற அளவும், அமைப்பும் கொண்ட சூட்சும சரீரம் எடுக்குமாம். அதன் பின்னரே சூட்சும சரீரம் எடுத்த அந்த ஜீவாத்மாவானது யம தூதர்களுடன் யமலோகத்துக்கு பயணத்தை துவக்குமாம். அதன் பயணத்துக்கு வழி வகுக்கும் நிலையை ஏற்படுத்தவே யதாஸ்தானம் எனும் சடங்கு செய்து அந்த ஜீவனுக்கு நாம் விடை கொடுத்து அனுப்புகிறோம்.

**267)** இறந்தவர் மனைவி உயிருடன் இருந்தால், அவளும் ப்ரபூத பலி சடங்கில் கலந்து கொள்ள வேண்டும். அன்றைய தினம் ஒரு புதுப் புடவை வாங்கி அதை அவள் தோளின் மீது சகோதரர்கள் போட வேண்டும். கையில் தரக் கூடாது. அதை தோளில் புடவை சாத்துவது அல்லது புடவை போடுவது என்பார்கள். அதற்குப் பிறகு அவள் அப்படிப்பட்ட பட்டுப் புடவைகளை அணியக் கூடாது என்பதற்காக கடைசியாக அவளுடைய வீட்டினரால் சம்பிரதாயமாக தரப்படுவதாம். சமூகத்தில் விதவை எந்த நிலையில் வாழ வேண்டும் என்பதை அவளுக்கு புரிய வைக்கும் ஆன்மீக போதனைக்காகவே வைக்கப்பட்டு உள்ள இந்த சடங்கிற்கு வேறு எந்த காரணமும் கிடையாது.

**268) தாலி எடுத்தல்:-** பத்தாம் நாள் சடங்கிற்குப் பிறகு நார் புடவையை பிரித்து சகோதரன் கழுத்தில் போட்ட பின் இரவு நடு எல்லா சுமங்கலிகளையும் வெளியே போகச் சொல்லி தாலியை கழுத்தில் இருந்து எடுத்துத் தருமாறு கூறி அதை வாங்கிக் கொண்டு பால் கிண்ணத்தில் போடுவர். இந்த சடங்கு விதவையானவள் உலக பந்தம் அனைத்தையும் அறுத்துக் கொள்வதாக தத்துவமாக உள்ளது.

**269)** பண்டைக் காலத்தில் கணவரை இழந்த பெண்கள் பத்தாம் நாள் சடங்கிற்குப் பிறகு விதவையாகக் கருதப்பட்டதினால் அன்றைய தினம் அவர்கள் தாலியை எடுத்து விட்டு தலைமுடியை வழித்துக் கொண்டு, வெள்ளை

புடவையை மட்டுமே அணிந்து கொள்ள வேண்டும் என்றும், வேறு எந்த வண்ணப் புடவைகளையோ, நகைகளையோ அணிந்து கொள்ளக் கூடாது என்றும், விதவையான பின் வெளியில் செல்லக் கூடாது, விழாக்களில் கலந்து கொள்ளக் கூடாது என்றெல்லாம் பலவிதமான கட்டுப்பாடுகளை விதித்து இருந்தார்கள்.

**270)** அதற்கு அடிப்படைக் காரணம் விதவை ஆன பெண்கள் உலக சுக போகங்களில் மூழ்கி காம இச்சை கொண்டு அலையக் கூடாது, தமது இறுதி வாழ்நாள் வரை பக்தி மார்கத்தில் இருக்க வேண்டும் என்பதற்காக வைக்கப்பட்டு இருந்த சடங்கு முறை ஆகும். ஆனால் தற்காலத்தில் பல குடும்பங்களில் இந்த சடங்கு முறை இருப்பதாகத் தெரியவில்லை. காரணம் விதவையான பெண்கள் தமது தலைமுடியை வழித்துக் கொள்வதில்லை, வெள்ளைப் புடவைகளை அணிந்து கொள்வதில்லை, நகைகளை அணிந்து கொள்கின்றார்கள், ஆடம்பரமாகவும் இருக்கிறார்கள். அனைத்து விழாக்களிலும் கலந்து கொள்கிறார்கள். ஆகவே இந்த சடங்கு தார்மீக அடிப்படையில் அமைந்த ஒன்றாகும்.

**271) ஆனந்த ஹோமம்:** சாந்தி ஹோமம் செய்து முடிக்கப்பட்ட பின்னர் சில குடும்பங்களில் ஆனந்த ஹோமம் என்பதையும் செய்வார்கள். இது வீட்டினரின் மகிழ்ச்சிக்காக செய்யப்படும் ஹோமம் ஆகும். இவை அனைத்தும் இறந்தவரின் ஆன்மா சாந்தியடையவும், அவரைச் சார்ந்தவர்கள் துக்கத்தில் இருந்து மீண்டு வரவும் செய்யப்படும் சடங்குகள் ஆகும்.

**272) சாந்தி ஹோமம்:** வீட்டிற்கு வந்ததும் சாந்தி ஹோமம் செய்து முடிந்தப் பின் வந்துள்ள உறவினர் அனைவருக்கும் உணவு அளிப்பார்கள். சாந்தி ஹோமம் அமைதிக்காக செய்யப்படும் ஹோமம் ஆகும். அன்று தீட்டு விலகி விட்டதாக ஐதீகம் உண்டு. அன்று சாரு சம்பாவனை (உறவினருக்கு அப்பம் மற்றும் பொறி ஒதியிடுதல்) என்பதையும் செய்வார்கள். இது இறந்தவருக்கு செய்யப்படும் தானமாகும். அன்று குடும்பத்தினருக்கு விலகி விட்டதாக கருதப்படும் தீட்டு மறுநாள் மீண்டும் வந்து சேரும் என்பார்கள்.

**273)** வசுக்கள், ஏகாதச ருத்திரர்கள் மற்றும் ஆதித்யர்கள் கர்மாவில் செய்யப்படும் மந்திரங்களுக்கு உரிய தேவதைகள். ஜீவாத்மாவை பிடித்துக் கொள்ள முயலும் தீய ஆவிகளை விரட்டி தம்மை நோக்கி பயணித்துக் கொண்டு இருக்கும் ஜீவாத்மாவுக்கு பாதுகாப்பு தரும் தேவதைகளே வசுக்கள், ஏகாதச ருத்திரர்கள் மற்றும் ஆதித்யர்கள். அவர்களுடைய பாதுகாப்பில் அடுத்த பத்து நாட்களிலும் இருக்கும் ஜீவாத்மா, அந்த பத்து நாட்களிலும் செய்யப்படும் சடங்குகளினால் பசி, தாகம் இன்றி இருக்கும்.

**274)** பத்து நாட்கள் சடங்குகள் எனும் கணக்கிற்கு இன்னொரு காரணமும் உள்ளது. மரணம் அடைந்து விட்டவர்களது ஜீவாத்மாவானது வசுக்கள், ஏகாதச ருத்திரர்கள் மற்றும் ஆதித்யர்களிடம் பாதுகாப்பாக உள்ள நேரத்தில் அந்த ஜீவாத்மாவின் தர்ம, அதர்ம கணக்குகளை ஆராய்ந்து பார்த்து அதற்கான தண்டனைகளையும் முடிவு செய்து கொண்ட பின்னரே அந்த ஜீவாத்மாவை தமது யமகணங்கள் மூலம் அழைத்துக் கொண்டு செல்ல யமதர்ம தேவருக்கு பத்து நாட்கள் ஆகுமாம்.

**275)** வசுக்கள், ஏகாதச ருத்திரர்கள் மற்றும் ஆதித்யர்களிடம் இருந்து யமகணங்களின் கட்டுப்பாட்டிற்கு ஜீவாத்மா போய் விட்டாலும் பத்து நாட்களுக்கு மேலாக அடுத்த இரண்டு நாட்களும் அந்த ஜீவாத்மாவை அங்கு இருந்தவாறு மீதமுள்ள சடங்குகளில் பங்கேற்க யமதர்மன் அனுமதித்து உள்ளாராம்.

## ஜீவாத்மாவின் பயணம் -11 பதினோராவது நாளன்று நடைபெறும் சடங்குகள்

**276) ஏகோத்திஷ்டம்:** பதினோராவது நாள் காரியம் என்பது ஒருவரது இறப்புக்குப் பிறகு செய்யப்படும் இறுதிக் சடங்குகளில் ஒன்றாகும். இது பொதுவாக ஏகோத்திஷ்டம் (அதாவது ஒருவருக்கு என்பது பொருள்) என்று அழைக்கப்படுகிறது.

**277)** ஜீவாத்மா பூமி உலகத்திலிருந்து மூதாதையர்களின் உலகத்திற்கு (பித்ரு-லோகம்) மாறுவதற்கு உதவுவதற்காக

இந்த சடங்கு செய்யப்படுகிறது. பதினொன்றாம் நாள் வரை, ஜீவாத்மா பூமிக்குரிய பிரேத சரீரத்தில் இருந்ததாக கருதப்படுகிறது. 11 ஆம் நாளன்று செய்யப்படும் சில சடங்குகள் பின்வருமாறு:

- **யஜ்ஞோபவீத தாரணம்:** நீராடிய பின்னர், கர்த்தாக்கள் அனைவரும் பத்து நாட்களும் அணிந்திருந்த பழைய பூணலை கயற்றி விட்டு புதிய பூணலை முறைப்படி மந்திரங்கள் ஓதி அணிந்து கொள்ள வேண்டும்.
- **புண்யாஹவாசனம்:** புண்யாஹவாசனம் என்பது தீட்டு வீட்டை மந்திரங்கள் ஓதி புனிதப்படுத்தவும், சுத்தப்படுத்தவும் வீட்டில் மீண்டும் அமைதியும் மகிழ்ச்சியும் திரும்புவதற்கு செய்யப்படும் ஒரு சடங்காகும்.
- **நவசிராத்தம்:** நவசிரார்த சடங்கு என்பது என்பது ஒன்பது நாளுக்கும் சேர்த்து இறந்தவருக்காக செய்யும் ஒன்பது தானம் ஆகும். இதை செய்வதின் மூலம் ஜீவாத்மா பயணிக்கையில் அதற்குத் தேவையான சக்தி கிடைக்கும் என்பது நம்பிக்கை.
- **வ்ருஷ உத்ஸர்ஜனம்:** வ்ருஷபம் என்றால் காளை மாடு என்று அர்த்தம். உத்ஸர்ஜனம் என்றால் விடுவித்தல் அல்லது விலக்குதல் என்று பொருள். வ்ருஷ உத்ஸர்ஜனம் என்பது இறந்தவரின் பிரேத உடல் இந்த உலகிலிருந்து அகலுவதற்காக செய்யப்படும் சடங்கு ஆகும். அந்த சடங்கு என்ன என்றால் ஒரு மாட்டின் கன்றின் மீது சூலம் போல குறியிட வேண்டும். அதன் பிறகு அந்த காளை மாட்டை தானம் செய்து விட வேண்டும். இறந்து விட்டவரின் ஜீவாத்மாவானது பிசாசாக மாறி விடக் கூடாது; மேலுலகம் சென்று பித்ருக்களோடு நல்ல முறையில் சேர வேண்டும் என்பதற்காக செய்யப்படும் சடங்கு ஆகும்.
- **ஏகாதச பிராமண போஜனம்:** பதினோரு பிராமணர்களுக்கு உணவு அளித்தல்.
- **ஆத்ய மாசிகம்:** பொதுவாக மாசிகம் என்பது இறந்தவர் ஜீவனுக்கு செய்யும் நேர்த்திக் கடன் என்பதாகும். இந்த சடங்கின் மூலம் இறந்தவரின் ஆன்மாவுக்கு பிசாசத்துவ நிவிர்த்தி கிடைக்கும். இந்த சடங்கு இறந்தவரின் ஆன்மா அமைதி பெறவும், அவரை அடுத்த நிலைக்கு கொண்டு செல்லவும் செய்யப்படுகின்றன.

மேலும், இது குடும்பத்தோர் மற்றும் உறவினர்கள் துக்கத்திலிருந்து மீண்டு வருவதற்கும் ஒரு வழியாகும்.

- **ஒத்தன் சாப்பாடு :-** பதினோராம் நாளன்று நடைபெறும் இன்னொரு முக்கியமான சடங்கு ஒத்தன் சாப்பாடு என்பதாகும். அன்றைய தினம் ஒத்தன் எனப்படும் ஒரு புரோகிதரை அழைத்து வந்து அவரையே உப்பில்லாத உணவை அங்கேயே தயார் செய்து அதை உண்டு விட்டு செல்லுமாறு கூறுவார்கள்.
- அவர் தயாரிக்கும் உணவில் உப்பு மற்றும் பிற சுவையான பொருட்களைத் தவிர்ப்பது, குடும்பத்தின் துயர நிலையையும், உலக இன்பங்களிலிருந்து பிரிந்திருப்பதையும் பிரதிபலிக்கிறது. அவர் உணவு தயாரிக்கத் தொடங்குவதற்கு முன்பு அதற்காக அவருக்கு தட்சணை தர வேண்டும்.
- அவர் போகும்போது அவரை யாரும் பார்க்கக் கூடாதாம். இதுவும் ஒரு முக்கியமான சடங்காம். அப்படி செய்பவரையே பிரேத மனிதர் என்பார்கள்.

## ஜீவாத்மாவின் பயணம் -12 பன்னிரண்டாம் நாளன்று நடைபெறும் சடங்குகள்

**278)** 12வது நாளில் செய்ய வேண்டிய கர்மாக்கள் புண்யாஹவாசனம், ஔபாஸனம், சோடசம், ஸபிண்டீகரணம், தானங்கள், சோதகும்பம் போன்றவை ஆகும். நீர்க் குடத்தைத் (உதக கும்பம்) தானமாக வழங்குவதே சோத கும்ப சிரார்த்தம் என்று கூறப்படுகின்றது. சோத கும்ப சிரார்த்தம் செய்வதின் மூலம் இறந்தவர்களுடைய ஜீவாத்மாவின் தாகம் மட்டும் அல்ல அதன் பசியும் தீரும் என்பர்.

**279) புண்யாஹவாசனம்:** 12ஆம் நாளும் புண்ணியாகவாசனம் செய்யப்படுகின்றது. தீட்டு வீட்டை மந்திரங்கள் ஓதி புனிதப்படுத்தவும், சுத்தப்படுத்தவும் வீட்டில் மீண்டும் அமைதியும் மகிழ்ச்சியும் திரும்புவதற்கு செய்யப்படும் ஒரு சடங்காகும்.

**280) ஸபிண்டீகரணம் :-** இதில் முக்கியமான கர்மா ஸபிண்டீகரணம் என்பதாகும். ஸபிண்டீகரணம் என்பது தன்னுடைய குலத்திலுள்ள மூதாதையர்களுக்காக செய்யப்படுகின்ற பூஜையாகும். இறந்தவருக்கு முன் மாண்ட அவருடைய மூன்று தலைமுறையினரின் பிண்டத்துடன் இறந்தவரின் பிண்டத்தையும் ஒன்று சேர்ப்பது ஸபிண்டீகரணம் எனும் சடங்கு ஆகும்.

**281)** இந்த சடங்கை மரணம் அடைந்தவரது 12வது தினத்திலோ, 15வது தினத்திலோ அல்லது ஆறாவது மாதத்திலோ செய்யலாம். ஆனால் கண்டிப்பாக செய்ய வேண்டும். அதுவரை இறந்தவர் பிரேத ஜென்மத்துடன் இருப்பார். ஆகவே அதை செய்து முடிக்காதவரை இறந்தவருடைய பிள்ளைகள் எந்தவிதமான சுப நிகழ்ச்சிகளிலும் கலந்து கொள்ளுதல் கூடாது. ஸபிண்டீகரணம் செய்து முடித்த பின்பே இறந்தவருடைய பிரேத ஜென்மமானது முழுவதுமாக நீங்கப்பெற்று பித்ருக்களின் உருவை அடையும். இந்த கர்மாவை செய்த பின் தாய், தந்தையரின் வம்சாவளியில் மூன்று தலைமுறையினருக்கு சிரார்த்தம் செய்ய வேண்டும்.

**282)** பிரேதத்துவம் பெற்ற ஜீவாத்மாக்கள் உடனடியாக அடுத்த பிறவி எடுக்கும் என்பதல்ல. அந்த பிரேத ஜீவாத்மாக்கள் யமலோகத்துக்கும் போகாமல், சொர்க்க லோகத்துக்கும் போகாமல் யமதர்மனின் கணக்கு வழக்குகளின் அடிப்படையில் அவற்றுக்கு கிடைக்க உள்ள தண்டனை மற்றும் பிரத பலன்களை எதிர் பார்த்தவண்ணம் பயணித்துக் கொண்டு இருப்பார்கள். அதன் பயணம் முடிவுற ஒரு வருட காலம் ஆகுமாம். இறந்தவராது ஜீவாத்மா யம லோகம் செல்வதற்கு இடையே 16 இடங்களில் தங்கி செல்ல வேண்டும். அந்த தங்குமிடங்களில் தாகம் இன்றி பசி இன்றி இருக்க வேண்டும் என்பதற்காக உணவு மற்றும் தண்ணீர் கிடைக்கும்படி செய்யவே அந்த ஒரு வருட காலத்துக்குள் பதினாறு ஸ்ரார்தங்களை செய்ய வேண்டி உள்ளது. இதை சோத கும்ப சிரார்த்தம் என்று கூறுவார்கள்.

**283)** ஒரு வருடத்தில் அந்தந்த குறிப்பிட்ட நாளில் செய்ய வேண்டிய ஸ்ரார்தத்தை ஏதாவது ஒரு தவிர்க்க முடியாத காரணத்தினால் கர்த்தாவினால் செய்ய முடியாது போய்

விட்டால், அந்த பாவம் கர்மாவை செய்பவருக்கு போகாது. மாறாக அந்த பாவம் எந்த ஜீவனுக்காக அந்த ஸ்ரார்தம் செய்யப்படுமோ அதற்கு போய் சேரும். அதனால் அது படும் வேதனையின் விளைவாக, அந்த ஜீவனின் குடும்பத்தினர் மன வேதனைகளை அடைவார்கள். அந்த நிலை ஏற்படக் கூடாது என்பதற்காகவே ஒரே நாளில் அந்த பதினாறு ஸ்ரார்தங்களை முறையாக, நியதிப்படி செய்வதின் மூலம் யமதர்ம தேவர் அந்த ஜீவன்களுக்கு கிடைக்க உள்ள தண்டனைகளின் கொடுமைகளைக் குறைப்பார் என்பது நம்பிக்கை.

**284)** பதினாறு ஸ்ரார்தங்களையும் ஒரே நாளில் செய்து முடிக்க முடியாது என்பதினால்தான் பன்னிரண்டாம் நாளன்று பதினாறு அந்தணர்களுக்கு அரிசி, வாழைக்காய் போன்றவற்றுடன் தட்ஷணையையும் சேர்த்து கொடுத்து அந்த குறிப்பிட்ட கர்மாவை செய்து முடிக்கிறார்கள். பதினாறு அந்தணர்களுக்கு தரும் தானங்களைத் தவிர, ஒரு அந்தணருக்கு போஜனமும் போட்டு தட்சணை தருவார்கள்.

## ஜீவாத்மாவின் பயணம் -12 (a) பன்னிரண்டாம் நாளன்று நடைபெறும் சடங்குகள்- அதற்கான காரணங்கள்

**285)** சரீரத்தை விட்டு வெளியேறிய ஜீவாத்மா தகனத்துக்குப் பின்னர் அடுத்த பதினோரு நாட்களும் சூட்சும உடலோடு பூவுலகிலேயே வாசம் செய்கிறது. அதனால்தான் அந்த பதினோரு நாட்களும் அந்த ஜீவனின் பசி, தாகம் ஆகியவற்றை அடக்குவதற்காக எள்ளும் தண்ணீரும் கலந்து தர்ப்பணம் செய்து பிண்டம் போடுகின்றார்கள். ஜீவாத்மாவிற்கு மானிட சரீரமே இல்லை எனும்போது அவை எப்படி பிண்டத்தை உண்டு தர்பை மூலம் தரப்படும் எள்ளும் தண்ணீரையும் குடிக்க முடியும், பிண்டத்தை உண்ண முடியும் என்ற சந்தேகம் எழலாம். நாம் உண்ணும் உணவை நாம் உண்ட பின்னரே, நமது பசி அடங்குகின்றது. இவை அனைத்தும் உடல் செயல்களுடன் தொடர்புடையவை. ஆனால் மானிட சரீரம் அற்ற ஜீவாத்மாவினால் உடல் ரீதியாக எந்த உணவையும் உட் கொள்ளவோ, தண்ணீர் குடிக்கவோ முடியாது. எனவே,

மந்திர உச்சாடனைகளினால் வெளிப்படும் மந்திர அலைகள், எள் மற்றும் தண்ணீர் கலந்த பிண்டத்தை, ஜீவாத்மாக்கள் உண்ணும் நிலையிலான உணவு சக்திகளாக மாற்றும்போது, கண்ணுக்குத் தெரியாத ஜீவாத்மாக்கள் அவற்றை உறிஞ்சி தங்கள் பசி மற்றும் தாகத்தைத் தணித்துக் கொள்கின்றன.

**286)** வெள்ளை எள் என்பது திருமாலின் வியர்வையிலிருந்து தோன்றியதாக கருதப்படுவதினால் அந்தத் தானியம் மிகவும் பரிசுத்தமானதாகும். கருப்பு எள் அதே விஷ்ணுவின் இன்னொரு அவதாரமான வராஹ மூர்த்தியிடம் இருந்து தோன்றியதாக கூறப்படுகின்றது. ஆகவே சிரார்த்த காலத்தில் எந்த எள்ளை பயன்படுத்தினாலும் பலன் ஒன்றே.

**287)** சிரார்த்த காலத்தில் எள்ளை தண்ணீருடன் கலந்து தர்பை புல் மூலம் சமர்பிக்கையில், பித்ருக்களின் பசியைப் போக்கி திருமால் வாழும் இடமான வைகுண்டலோகத்துக்கு இறந்தவர்களது ஜீவாத்மாக்களை அனுப்பி வைப்பதாக ஐதீகம் உள்ளது.

**288)** மும்மூர்த்திகளும் வசிப்பதாக கூறப்படும் தர்ப்பைப் புல் முதலில் ஆகாயத்தில் தோன்றியது என்றும் அதுவே பரப்பிரும்மனின் வடிவம் என்றும் அதனால் தர்பை உள்ள இடத்தில் இருந்து தீய சக்திகள் ஓடி விடும். இதனால்தான் இறந்தவரது உடலில் இருந்து வெளியேறிய ஜீவாத்மாவை தீய சக்திகள் அணுக முடியாமல் இருக்க தர்பை மீது சவத்தை வைப்பார்கள்.

**289)** தர்பையில் நமக்கு தெரியாத அளவிலான காந்த சக்தி அதிகம் உள்ளது என்பதினால் அதை கையில் வைத்துள்ளவர்களுக்கு, பிராண சக்தியைத் தருகிறது. அதனால்தான் நாம் சடங்குகள் செய்யும்போது இழக்கும் பிராண சக்தியை அதிகரிக்க அதை பயன்படுத்துகிறோம். வேதங்களிலும் தர்பையின் மகிமையைக் கூறி உள்ளார்கள்.

**290)** சாஸ்திரங்களின் அடிப்படையில் அமைந்த நம்பிக்கையின்படி, நாம் பன்னிரண்டு நாட்கள் சடங்குகளைச் செய்யத் தவறினால், இறந்தவரின் ஆன்மாக்கள் பித்ரு லோகத்தை விரைவாக அடையாது. எம தேவரிடம் இருந்து உரிய நீதியைப் பெற்ற பிறகும் உடைந்த

இதயத்துடன் இலட்சியமின்றி அலைந்து திரியும். ஜீவாத்மா வேதனைப்பட்டால், அது சம்பந்தப்பட்ட குடும்பங்களுக்கு பல இன்னல்களை விளைவிக்கும்.

## ஜீவாத்மாவின் பயணம்-13
## 13 ஆம் நாள் சடங்குகள்

**291)** முதல் பன்னிரண்டு நாட்கள் அசுப சடங்குகள் இறந்தவருக்காக செய்யப்படும் சடங்குகள் என்றாலும், பதிமூன்றாம் நாள் செய்யப்படும் மங்களகரமான சடங்கானது இறந்து விட்டவருடைய குடும்பத்தினர் அதுவரை கொண்டிருந்த துயர நிலையை விலக்கிக் கொள்வதை குறிக்கும் சடங்கு ஆகும். அன்றைக்குத்தான் தமது கர்ம பலன்களுக்கு ஏற்ப யம தேவரிடம் இருந்து தண்டனைப் பெற்றுக் கொள்ளும் ஜீவாத்மா தண்டனைக் கால முடிவில், ஏழு தலை முறைகளை சேர்ந்த பித்ருக்களுடன் ஒன்றிணைகின்றது என்ற செய்தியை தருகின்றது.

**292) சுபஸ்வீகாரம் :-** பதிமூன்றாம் நாளன்று வீட்டின் அனைவருக்கும் உள்ள தீட்டு காலம் முடிந்து விடும். குடும்பத்தினர் குளித்து விட்டு புத்தாடை அணிந்து கொள்வார்கள். அன்று ஹோமம் செய்து அந்த ஹோம ஜலத்தை வீடு முழுவதும் தெளித்து வீட்டையும் சுத்தமாக்குவார்கள். இதை சுபஸ்வீகாரம் என்று கூறுவார்கள். இறந்து போன ஜீவாத்மா புதிய உலகிற்கு செல்ல ஆயத்தம் ஆகி விட்டதையும், இனி அதன் குடும்பத்தினர் மகிழ்ச்சி மிக்க நாட்களை எதிர் கொள்வார்கள் என்ற தத்துவத்தையும் காட்டுகின்றது.

**293)** புரோஹிதர் **நவகிரஹ ஹோமம், சாந்தி ஹோமம்** போன்றவற்றை செய்து வீடு முழுவதும் மற்றும் வீட்டில் உள்ள அனைவரின் மீதும் ஹோமத்தில் வைத்து பூஜை செய்த புண்ணியாவசன தண்ணீரை தெளிப்பார்.

**294)** சுபஸ்வீகாரத்தின் அன்று மாலை புரோஹிதர் இறந்தவரின் ஜீவாத்மா பயணிக்கும் கதையைக் கூறுவார். புரோஹிதர்களினால் கூறப்படும் அந்த கதை கருடபுராணத்தில் கருடாழ்வாருக்கு திருமால் கூறியதான கதையின் அடிப்படையில் அமைந்து உள்ளது.

**295)** அன்று மாலை குடும்பத்தினர் அனைவரும் ஏதாவது ஒரு ஆலயத்திற்கு சென்று வழிபட்டு விட்டு வருவார்கள். அதோடு வீட்டினருக்கு இருந்த அனைத்து தீட்டும் முடிந்து விட்டது என்பதாகும்.

## ஜீவாத்மாவின் பயணம் -14 பன்னிரண்டு நாட்கள் சடங்குகள்- பொது நியதிகள்- அவற்றின் காரணங்கள்

**296)** குடும்பத்தில் ஒருவருடைய மரணத்தினால் வீட்டினருக்கு ஏற்பட்டு உள்ள அசௌகர்யம் அதாவது இறந்தவரது இழப்பினால் ஏற்பட்டுள்ள துயர நிலைக் காலம் என்பதை சுருக்கி அசௌகம் என்பார்கள். அதைதான் சாஸ்திர சம்பிராயததில் தீட்டு காலம் என்று கூறி உள்ளார்கள்.

**297)** சாஸ்திரங்களின் அடிப்படையில் மரணம் அடைந்தவர் வீட்டினர் 12 நாட்கள் தீட்டு காலத்தைக் கடை பிடிப்பார்கள். அந்த 12 நாட்களில் அவர்கள் சுப காரியங்களில் கலந்து கொள்ள தகுதி அற்றவர்களாக கருதப்படுவார்கள்.

**298)** ஒரு மனிதன் இறந்த பிறகு அவருடைய ஆன்மா இறைவனை அடைய வேண்டும் என்பதற்காகவும், பிதுர் லோகத்தில் உள்ள அவருக்கு முன் இறந்த ஏழு தலைமுறையினரின் குடும்பத்தினருடன் சேர்ந்து சாந்தி அடைய வேண்டும் என்பதற்காகவும்தான் பன்னிரண்டு நாள் அசுப சடங்குகள் செய்யப்படுகின்றன. அந்த கர்மாக்கள் நடக்கும் காலத்தில் சாதாரணமாக வீடுகளில் அடுப்பை மூட்ட மாட்டார்கள்.

**299)** பண்டைய காலத்தில், மக்கள் விறகு மற்றும் மாட்டு சாணத்திலான வறட்டி போன்றவற்றை பயன்படுத்தி அடுப்பை பற்ற வைத்து உணவு சமைத்தனர். இறுதி சடங்கில் சுடுகாட்டிலும், சடலத்தின் உடலை தகனம் செய்வதற்கும், தினசரி நடைபெறும் சடங்குகளுக்காகப் பயன்படுத்தப்படும் ஹோம குண்டம் மற்றும் பிண்டத்திற்கான அடுப்பை பற்ற வைப்பதற்கும் விறகு

மற்றும் மாட்டு சாணத்திலான வறட்டி பயன்படுத்தப்பட்டன என்பதினால் சடங்குகள் முடியும்வரை அந்த பொருட்களை பயன்படுத்தி சமையல் அடுப்பை பற்ற வைக்கக் கூடாது என்பதாக சாஸ்திரங்கள் தடை விதித்தன.

**300)** ஆகவே உறவினர்கள் மற்றும் நெருங்கிய நண்பர்கள் வீடுகளில் இருந்து இறந்தவர்கள் வீட்டிற்கு . உணவை கொண்டு தந்தார்கள்.

**301)** ஒவ்வொரு நாளும் சடங்கை முடித்துவிட்டு வீட்டிற்கு வரும்வரை வீட்டில் உள்ளவர்களால் சமைக்க முடியாது. இந்த காலத்தில் செய்யப்படும் சடங்குகளைப் போல அல்லாமல் பண்டை காலங்களில் கர்மாவை செய்து முடித்து விட்டு வர பல மணி நேரம் ஆகும். அதற்கு காரணம் அதில் பல நியதிகளை வைத்திருந்தார்கள். சடங்குகளை முடித்து விட்டு வீடு வந்தப் பின் மீண்டும் குளித்து விட்டுதான் அடுப்பை மூட்டி சமையல் செய்ய முடியும். அதற்கும் அதிக நேரம் ஆகும். வீடுகளில் குழந்தைகள் முதல் வயதானவர்கள் வரை இருந்தால் அவர்களால் அத்தனை நேரம் பட்டினியுடன் இருக்க முடியாது. ஆகவே உறவினர்கள் சாப்பாட்டைக் கொண்டு வந்து வைத்தார்கள். ஆகவே அது மனிதாபிமான அடிப்படையில் கடை பிடிக்கப்பட்டு வந்திருந்த சடங்கே தவிர இதற்கு வேறு விஞ்ஞான ரீதியிலான காரணம் இருப்பதாகத் தெரியவில்லை.

**302)** சமைப்பதைத் தவிர்ப்பது இறந்தவருக்கு மரியாதை செலுத்துவதற்கான அறிகுறியாகும், மேலும் அந்தக் குடும்பம் ஆழ்ந்த துக்கத்திலும், துயரத்திலும் இருப்பதை வெளிப்படுத்தும் செயல் ஆகும். இதற்கு ஒரு ஆன்மீக அடிப்படையிலான காரணமும் உள்ளது. பண்டை காலங்களில், அடுப்பை மூட்டி சமைத்ததும் சிறிதளவு சாதத்தை அடுப்பில் போட்டு அக்னி தேவருக்கு நைவித்தியமாக கொடுத்தப் பின்னரே வீடுகளில் சாப்பிடுவார்கள். அதாவது அக்னி தேவரை ஆராதிக்கும் ஒரு பூஜைப் போன்ற சடங்கு ஆகும். இன்றும் சில வீட்டில் இதைக் கடை பிடிக்கிறார்கள். துக்க வீட்டில் துக்க காரியங்கள் முடியும்வரை எந்த சுப நிகழ்ச்சியும், மங்களகரமான பூஜைகளும், யாகங்களும் செய்யக் கூடாது

என்பதினால் அக்னி தேவரை ஆராதிக்கும் ஒரு பூஜைப் போன்ற சடங்கு செய்யப்படக் கூடாது என்பதாக சாஸ்திரங்கள் கூறி உள்ளன.

**303)** கொழுந்து விட்டு எரியும் நெருப்பைத்தான் பயன்படுத்தக் கூடாது என்பதே ஒரு நியதி என்பதினால்தான் பல குடும்பங்களிலும் இன்று காஸ் அடுப்புகளை மூட்டாமல், மின்சாரத்தால் இயங்கும் ஹீட்டர், மைக்ரோ ஒவென் போன்ற அடுப்புகளை காஃபீ அல்லது டி குடிக்க பயன்படுத்துகிறார்கள். மின்சார ஹீட்டர்களை பயன்படுத்தி குளிக்க தண்ணீரை சூடு செய்வதை போலத்தான் அதுவும் உள்ளது என்று அது நியாயப்படுத்தப்படுகின்றது.

**304)** எதனால் 12 நாட்கள் துக்க காலம் என்பதாக அறிவிக்கப்பட்டது என்றால் இறந்தவர்களது குடும்பத்தினர்களின் துக்க அளவின் மன நிலைக்கு ஏற்ப தீட்டுக் காலம் நிர்ணயிக்கப்பட்டு இருந்துள்ளது. ஒருவர் பெரும் துயரில் இருக்கும்போது அவர்களது நரம்பு மண்டலம் தளர்ச்சி அடையும், மன நிலை பாதிக்கப்பட்டு விரக்தி நிலையில் இருப்பார்கள். இறந்தவர்களை நினைத்து அழுதழுது உடல் ரீதியாகவும் மன ரீதியாகவும் பலவீனம் அடைந்து இருப்பார்கள்; எனவே, அந்த சோகமான நிகழ்வை மறக்க அவர்களுக்கு மன ஓய்வும் அமைதியும் தேவைப்பட்டது.

**305)** கர்மா செய்யும் காலமான பன்னிரண்டு (பதிமூன்றாம் நாள் சுப காரிய நாள்) நாட்களில் அவர்கள் மெல்ல மெல்ல இயல்பு நிலைக்கு வந்து விடுவார்கள். ஆகவே அதையே தீட்டு காலம் என்று கூறி அந்த தீட்டு காலத்தில் இறந்தவர் வீட்டுக்கு அதிகம் யாரும் சென்று குடும்பத்தினரை தொந்தரவு செய்யக் கூடாது என்ற நெறிமுறைகளை வகுத்திருந்தார்கள். உடல் மற்றும் மன ரீதியாக பாதிக்கப்படுபவருக்கு ஒய்வு தர தீட்டு எனக் கூறப்பட்ட இதில் விஞ்ஞான அடிப்படையும் உள்ளது.

**306)** இறந்தவர்கள் வீடுகளில் அசுப சடங்குகளைச் செய்வதால், சடங்குகள் செய்யப்படும் நாட்களில் நேரில் சென்று இரங்கல் தெரிவிப்பதை நண்பர்களும், உறவினர்களும் தவிர்ப்பார்கள். இறந்தவரின் குடும்ப

உறுப்பினர்களும் அவர்களை மகிழ்ச்சியுடன் வரவேற்கவோ அல்லது அவர்களிடம் சாதாரணமாகப் பேசவோ முடியாது. ஆகவே எவரும் வந்து துக்கத்தை அதிகப்படுத்துவது இல்லை என்ற சூழ்நிலையில் உள்ள இறந்தவர்கள் குடும்பத்தினர் மெல்ல மெல்ல இயல்பு நிலைக்குத் திரும்புகிறார்கள்.

**307)** இருப்பினும், சாஸ்திரங்கள் துக்கக் காலமான 12 நாட்களை முற்றிலும் எதிர்மறையான அர்த்தத்தில் கூறி இருக்க முடியாது; ஏனெனில் பண்டைய காலத்தில் மரணம் அடைந்தவர் வீடுகளுக்கு செல்ல பல கட்டுப்பாடுகளை விதித்து இருந்ததற்கு சில அறிவியல் காரணங்களும் இருந்திருக்க வேண்டும். பண்டைய கால முனிவர்களும், துறவிகளும் வாழ்க்கையின் அனைத்துத் துறைகளிலும் பெரும் அறிவாற்றல் மிக்கவர்களாக இருந்துள்ளார்கள் என்பதை நாம் நினைவில் கொள்ள வேண்டும்.

**308)** தீட்டுக் காலம் அனுஷ்டிக்கப்பட்டதற்கு விஞ்ஞான அடிப்படையிலான இன்னொரு வலுவான காரணமும் உள்ளது. இறந்தவர்கள் உடலில் சில தீய கிருமிகள் தோன்றும். அவற்றில் சில பறந்த வண்ணமும் இருக்கும்; இறந்தவர் நோயாளியாக இருந்தால் அவரது உடலில் இருந்து வெளியேறும் கிருமிகள் மற்றவர்கள் மீதும் பரவலாம். ஆகவே அத்தகைய நிகழ்வுகளை கருத்தில் கொண்டே இறந்தவர்கள் வீட்டிற்கு மற்றவர்கள் அதிகம் போவதை தவிர்ப்பதற்காக 12 நாட்கள் கட்டுப்பாட்டை விதித்து இருக்கலாம்.

**309)** கர்மா செய்பவர்கள் தினமும் சுடுகாட்டுக்கு சென்று கல் ஊன்றிய இடத்தில் பன்னிரண்டு நாள் காரியம் செய்து விட்டு வருவார்கள். அப்போது அவர்கள் உடலில் சில விஷக் கிருமிகளுடன் கூடிய அசுத்தங்களும் ஒட்டிக் கொண்டு வர வாய்ப்பு உள்ளது. அப்படிப்பட்ட விஷக் கிருமிகளை தாமே அறியாமல் வீட்டுக்கு கொண்டு வந்து விடுவதினால் அவை வீட்டில் இருக்கும் அனைவரிடமும் பரவி விடும். சுடுகாட்டில் இருந்து கொண்டு வரப்படும் அந்த கிருமிகளின் வாழ்வு காலமும் 10 அல்லது 12 நாட்களே என்பதும் தெய்வ லீலையில் ஒரு அதிசயம் ஆகும். அவைகளும் வீட்டில் வந்து குளித்தவுடன் தண்ணீருடன் போய் விடும். ஆகவே அந்த பன்னிரண்டு நாட்களிலும்

சுடுகாட்டுக்கு சென்று விட்டு திரும்பும் வீட்டினரை தொட்டு, தழுவுவதின் மூலம் நம் மீதும் அந்தக் கிருமிகள் ஒட்டிக் கொள்ள வாய்ப்பு உள்ளது. அவற்றை மனதில் கொண்டுதான், சுத்தத்தை அனுஷ்டிக்க வேண்டும் என்பதை அறிவுறுத்தும் வகையில், மறைமுகமாக கர்மாவை செய்யும் வீட்டுக்குச் சென்றால் குளிக்காமல் வீட்டுக்குள் நுழையக் கூடாது என்று சாஸ்திர விதி நிர்ணயிக்கப்பட்டு இருந்தது. அவைகளே தீட்டு என கூறப்பட்டு அவர்களிடம் இருந்து மற்றவர்கள் தள்ளி இருக்க வேண்டும் என்று கூற காரணமாக அமைந்தது.

**310)** ஆனால் அந்த கிருமிகள் அனைத்தும் சுபஸ்வீகாரம் செய்யப்படும் பதிமூன்றாவது நாளன்று செய்யப்படும் ஹோம குண்டத்தில் இருந்து வெளிப்படும் ஹோம குண்டப் புகையை தாங்க முடியாமல் மரணம் அடைந்து விடும். அதற்குக் காரணம் ஹோமங்களில் பயன்படுத்தப்படும் குறிப்பிட்ட சில பொருட்களுக்கு மருத்துவக் குணமும், கிருமி நாசினி தன்மையும் உண்டு. ஹோம சடங்கு செய்யப்பட்ட 24 மணி நேரத்திற்குப் பிறகும் கிருமிகளைக் கொல்லும் சக்தி நீடிக்கும். ஹோம புகை எதிர்மறை சக்தியை நீக்குகின்றன மற்றும் ஆன்மீக ரீதியாக உயர்ந்த சூழ்நிலையை உருவாக்குகின்றன. விஞ்ஞான ரீதியிலான இதை மனதில் கொண்டுதான், கிருமி நாசினி போன்ற குறிப்பிட்ட தன்மைகளை கொண்ட பொருட்களை ஹோமங்களில் பயன்படுத்த வேண்டும், இன்னென்ன பொருட்களை ஹோமத்தில் போட்டால்தான் அந்த கலவையின் சக்தியினால் ஹோமப் புகையில் இருந்து கிருமி நாசினி தோன்றும் என்பதற்காக அவை சாஸ்திர விதி என்று கூறப்பட்டு இருந்திருக்க வேண்டும் என்பது தெளிவு.

**311)** இப்படியான விஞ்ஞான ரீதியிலான காரணங்களைத் தவிர மேலும் ஒரு ஆன்மீகக் காரணமும் உள்ளது. அந்த பன்னிரண்டு நாட்களிலும் இறந்தவர்களது ஜீவாத்மா தான் வாழ்ந்திருந்த அந்த வீட்டில் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருக்கும். அந்த நேரத்தில் உறவினரும் மற்றவர்களும் வீட்டுக்கு வந்து உற்சாகமாக இருந்தால் அதைக் கண்டு அந்த ஜீவாத்மா வேதனைப்பட்டு மனம் வெதும்பி நிற்கும்.

**312)** அவர்களுடைய சந்தோஷ அதிர்வலைகள் அந்த இடத்தில் இருந்து துயர அதிர்வலைகளை துரத்தி அடிக்க, துயரமுற்று உள்ள ஜீவாத்மாக்களும் சடங்குகளை ஏற்க முடியாமல் அங்கிருந்து ஓடிப் போக நேரிடும். அதனால் அது படும் வேதனை, துயரம் போன்றவை அந்த குடும்பத்தின் அமைதி இன்மைக்கு வழி வகுத்து விடும். ஒரு விதத்தில் பார்த்தால் அதுவே துயரத்தோடு இருக்கும் ஜீவாத்மாவின் சாபத்தைப் பெற வழி வகுத்து விடும்.

## ஜீவாத்மாவின் பயணம் - 15 வருடாந்தர சிரார்த்தம் மற்றும் தர்ப்பணம்

**313)** கருட புராணத்தின்படி, பிரேத வடிவில் இருக்கும் ஆன்மா, 11 மற்றும் 12 ஆம் நாள் சடங்குகளில் வழங்கப்படும் உணவைப் பெற வானத்திலிருந்து கீழிறங்கி வருகிறது. யம கணங்கள் ஜீவாத்மாவை ஒரு கயிற்றால் கட்டி யம லோகத்திற்கு இழுத்துச் செல்லும்போது, அதை தாங்கி கொண்டு அவர்களுடன் பயணிக்க தேவையான சக்தியை, அந்த இரண்டு நாட்களிலும் உட்கொள்ளும் உணவு அந்த பிரேதத்திற்கு அளிக்கிறது.

**314)** கருட புராணத்தின்படி, அப்போது அந்த ஜீவாத்மா தன் வீட்டை பார்த்து கதறிய வண்ணம் நாள் ஒன்றுக்கு 247 காத தூரம் என பகலிலும் இரவிலும் யம கிங்கர்களுடன் யமபுரியை நோக்கி நடந்து செல்லத் துவங்கும். அவ்வாறு நடந்து செல்லும் ஜீவனுக்கு பசியும் தாகமும் அந்தந்த ஜீவன் அவற்றுடன் சுமந்து செல்லும் கர்மாக்களின், கர்த்தாக்கள் செய்யும் சடங்குகளின் தன்மையையும் பொறுத்தே அமைந்து இருக்கும்.

**315)** ஜீவாத்மா மரணம் அடையும் முன்னர் அது குடி இருந்திருந்த உடலின் செயல்களினால் அடைந்து இருந்த கர்ம வினைகளுக்கு ஏற்ப அது அழைத்துச் செல்லப்படும் பாதைகள் எளிதில் கடந்து செல்லும் தன்மையிலும், நடந்து செல்லவே முடியாத நிலையிலும் இருக்குமாம்.

**316)** உருவமற்ற ஜீவாத்மா எப்படி நடந்து செல்லும் என்பதாக ஒரு கேள்வி எழும்பலாம். பூமியில் உள்ள

பாதைகளை போலவேதான் வான்வெளியில் ஜீவாத்மாக்களை அழைத்துச் செல்ல அவர்களால் நடக்க முடிந்த தேவ தன்மையிலான பாதைகள் இறைவனால் அமைக்கப்பட்டு உள்ளன. அவை நம் கண்களுக்கு தெரியாது.

**317)** கருட புராணத்தின்படி, யமலோகம் செல்லும் வரையிலாவது கடுமையாக கடக்க வேண்டிய பாதையின் உக்கிரத்தை குறைத்து, அமைதியான மன நிலையில் அந்த ஜீவன்கள் பயணிக்க, அவர்களது வாரிசுகள் செய்யும் நியமங்களும் கர்மாக்களும் அவர்களுக்கு பெரிய அளவில் உதவுகின்றன.

**318)** அடுத்த ஒரு வருட காலத்தில் அந்த ஜீவாத்மாவின் வாரிசுகள் சிரத்தையோடு செய்யும் கர்மாக்கள், மற்றும் தான தர்மங்கள் யமராஜருக்கு விடப்படும் கோரிக்கை போல அமைந்து விடும். சடங்குகளில் ஓதப்படும் ஆற்றல் மிக்க மந்திர ஒலிகளின் அதிர்வலைகளினால் மனம் இளகும் யமதர்மராஜன் அந்த ஜீவாத்மாவை பசி தாகம் இல்லாமல் பார்த்துக் கொண்டு, நல்ல பாதையில் அழைத்து வருமாறு எம கிங்கர்களுக்கு உத்தரவு போடுவாராம்.

**319)** பசியோடு நடந்து செல்லும் ஜீவனுக்கு மாதத்தில் ஒரு நாள், அதாவது அந்த ஜீவன் இறந்த திதியன்று, ஓரிடத்தில் தங்க அனுமதி அளிக்கப்படும். அதனால்தான் ஒருவரது மரணத்திற்கு பின்னர் ஒவ்வொரு மாதமும் அவர் மரணம் அடைந்த திதியன்று அவருடைய உடலில் இருந்து வெளியேறிய ஜீவனின் பசியையும் தாகத்தையும் அடக்க மாதாந்திர திதி நடத்தப்பட்டு பிண்டம் போடப்படுகிறது. இவ்வாறு 12 மாதங்களும் வரக்கூடிய திதியன்று பிண்டம் கொடுத்து அந்த ஜீவனின் பசியை போக்க வேண்டும். அப்படி போடப்படும் பிண்டமும், செய்யப்படும் சடங்கும் நடந்து செல்லும் அந்த ஜீவாத்மாவின் பசியையும் தாகத்தையும் அடக்குமாம்.

**320)** சந்திரனின் வளர்பிறை சுழற்சியில் (சுக்ல பக்ஷம்) 15 திதிகளும், சந்திரனின் தேய்பிறை சுழற்சியில் (கிருஷ்ண பக்ஷம்) 15 திதிகளும் உள்ளன; ஒவ்வொரு திதியும் ஒவ்வொரு தேவதையினால் கட்டுப்படுத்தப் படுகின்றது என்பதினால் ஸ்ரார்தத்திற்கு திதி மிகவும் முக்கியமானது. இறந்து போனவர் எந்த திதியில் இறந்து போனாரோ அந்த

திதியில்தான் முதல் ஒரு வருடத்தில், ஒவ்வொரு மாதமும் அவருக்கு ஸ்ரார்த்தம் செய்ய வேண்டும். அப்படி செய்தால்தான் அவர்களின் ஜீவாத்மாக்கள் மன அமைதி பெற்று மறு வாழ்வில் மோட்சம் பெறுவதை உறுதி செய்ய முடியும்.

**321)** இவ்வாறு ஒரு ஆண்டு காலம் நடந்து செல்லும் அந்த ஜீவன் ஒரு ஆண்டு நிறைவடைந்தவுடன் யமபுரத்தை அடைகிறது. இதனால்தான் பயணிக்கும் ஜீவாத்மா யமபுரிக்கு செல்வதற்கு எடுத்துக் கொள்ளும் ஓர் ஆண்டு காலமும் அந்த வீட்டில் ஓர் ஆண்டுக்கு குதூகுலம், கொண்டாட்டம், சுபகாரியம் போன்றவை நடைபெறக் கூடாது என்று சாஸ்திரம் கூறுகிறது.

**322) தர்ப்பணம்:** குடும்ப உறுப்பினர் ஒவ்வொரு மாதமும் தர்ப்பணம் எனப்படும் சடங்கைச் செய்கிறார்கள். தர்ப்பணத்தின் முதன்மை நோக்கம் பித்ருக்களின் வடிவத்தில் இருக்கும் மூதாதையர்களை திருப்திப்படுத்தும் சடங்கு ஆகும்; தர்ப்பணம் செய்தால் மகிழ்ச்சி அடையும் பித்ருக்கள் தரும் ஆசிகள் குடும்பத்தினருக்கு நலனையும் நல்வாழ்வையும் தருகின்றது.

**323)** ஒரு வருடத்துக்குப் பின்னரும் எப்போது தர்ப்பணம் செய்தாலும் பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்ய வேண்டிய நாளன்று, பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்து முடிக்கும் வரை, வீட்டில் தெய்வ சம்பந்தமான பூஜைகளை நிறுத்தி வைத்து விட்டு, பித்ருக்களுக்கு தர்ப்பணம் செய்து முடிந்த பின்னர் தினசரி செய்ய வேண்டிய தெய்வ சம்பந்தமான பூஜைகளைக் கட்டாயம் செய்ய வேண்டும். இதனால் பித்ருக்களின் ஆசி கிடைக்கும்.

**324)** சூரியனும், சந்திரனும் ஒன்றாக இணைந்திருக்கும் நாளான அமாவாசையன்று பித்ருக்களுக்குப் பசியும் தாகமும் அதிகமாக ஏற்படும் என்று தர்ம சாஸ்திரங்கள் கூறுகின்றன. ஆகவே அம்மாவாசை தினங்களில் இறந்தவர்களின் பசியையும், தாகத்தையும் போக்க கறுப்பு எள் கலந்த தண்ணீரால் தர்ப்பணம் செய்ய வேண்டும். இதனால் இறந்தவர்களின் பசியும் தாகமும் விலகி ஆசி வழங்குவார்கள்.

**325)** அமாவாசை திதியன்று ஒவ்வொரு வீட்டு வாசலிலும் அந்தந்த வீட்டு பித்ருக்கள் வந்து நின்று கொண்டு

தங்களுக்குத் தரப்படும் எள் கலந்த தண்ணீரை பெற்றுக் கொள்வதற்காக காத்துக் கொண்டிருக்கிறார்கள் என்று தர்ம சாஸ்திரம் கூறுகின்றது

**326)** அதனால் அன்றைக்கு தர்ப்பணம் செய்து எள் கலந்த தண்ணீர் தரப்படவில்லை என்றால் அவர்கள் ஏமாற்றமடைந்து வருத்தத்துடன் திரும்பிச் செல்கிறார்கள் என்று சாஸ்திரங்களில் கூறப்பட்டு உள்ளன. தர்ப்பணம் செய்வதற்கு வசதியில்லாத இடத்தில் உள்ளவர்கள் பசுக்களுக்கு புல்லையிட்டு அவற்றைத் திருப்தி செய்தால் போதும் என்று சாஸ்திர நூல்கள் கூறுகின்றன.

**327)** வருடத்தில் வரும் மூன்று அமாவாசைகள் முக்கியமானவை. தை அமாவாசை, ஆடி அமாவாசை, புரட்டாசி அமாவாசை. இதில் புரட்டாசி அமாவாசை ரொம்பவே மகத்தானது என்கிறார்கள். மகாளய பட்சம் என்று சொல்லப்படும் புரட்டாசியின் மகாளய பட்ச பதினைந்து நாட்களும் முன்னோர்களுக்கான நாட்கள். எனவே இந்த நாட்களில், முன்னோர்கள் நம் வீட்டுக்கு வந்து போவார்கள், ஆசி வழங்குவார்கள் என்பது ஐதீகம். மகாளய அமாவாசை நாளில், செய்யப்படும் தர்ப்பணம் மிகவும் மகத்தானது என்பது நம்பிக்கை.

**328)** கோவில்கள், குளங்கள், கடல் போன்ற இடங்களில் செய்யப்படும் தர்ப்பணங்களுக்கு மிக அதிகமான சக்தி உண்டு. திருவாலாங்காடு, திருவள்ளூர், ராமேஸ்வரம், திருமயம், அரண்மனைப்பட்டி, திருவண்ணாமலை, திருவிடைமருதூர், காசி, திருநள்ளாறு ஆகிய இடங்களில் தர்ப்பணம் செய்வது மிக சிறந்தது.

**329)** அவை அனைத்தையும் விட திலதர்ப்பணபுரி எனும் ஊரில் (திருவாரூர்- பூந்தோட்டம் இடையில் உள்ளது) தர்ப்பணம் செய்வது மிக, மிக விசேஷமாக கருதப்படுகிறது. ஏன் என்றால் இங்கு ஸ்ரீராமரும் லட்சுமணரும் தம் தந்தையான தசரத மகாராஜாவிற்கும், தமது தந்தையைப் போல அவர்கள் கருதிய ஜடாயு பறவைக்கும் தர்ப்பணம் செய்தார்களாம்.

**330)** மறைந்த முன்னோர்களுக்கு நாம் செய்யும் சிரார்த்தங்களும், தர்ப்பணங்களும் நமது குடும்பத்தினரின் நன்மைக்காவே செய்யப்படுகிறது.

அகவே தவறாது சிரார்த்தத்தையும் தர்ப்பணங்களையும் செய்ய வேண்டும்.

**331) மாசிகம்:** மாசிகம் என்றால் பொதுவாக இறந்தவருக்கு பிண்டம் கொடுப்பது என்பது அர்த்தம். மாசிகம் என்பது ஒருவரது மறைவிற்குப் பின் மாதந்தோறும், ஒரு ஆண்டு முடியும்வரை, இறந்தவரின் ஆன்மா சாந்தி அடையவும், அடுத்த பிறவிக்கு அவர் நல்ல முறையில் செல்லவும் பிரார்த்தனை செய்யப்படும் சடங்கு ஆகும். இறந்தவர் திதியைக் கணக்கில் கொண்டு ஒவ்வொரு மாதமும் மாசிகம் எனும் சடங்கு செய்யப்படும்.

**332)** சில வருடங்களில் ஒரே மாதத்தில் இரண்டு திதிகளும் வருவதினால் வருடத்திற்கு 16 மாசியங்கள் வருவதாக கூறுகின்றார்கள். அவரவர் குடும்ப புரோஹிதர் ஒவ்வொரு மாதமும் செய்ய வேண்டிய மாசிகம் குறித்துக் கூறுவார்கள். அவர்களை கலந்து ஆலோசனை செய்து மாசிகம் செய்வதே சிறப்பு ஆகும்.

**333)** குடும்ப சூழ் நிலை மற்றும் உள்ள இடத்தினால் ஒரு சிலர் மாதம், மாதம் அவர் இறந்த திதிக்கு மாசியம் கொடுக்காமல் ஆறு மாதத்துக்கு ஒரு தடவை மாசியம் கொடுப்பதும் உண்டு என்றாலும் அது அத்தனை ஏற்புடையது அல்ல என்பதாக புரோஹிதர்கள் கூறுகின்றார்கள்.

**334) சிரார்த்தம்/ திவசம்:** சிரார்த்தம்/ திவசம் என்பது இறந்த மூதாதையர்களுக்கு மரியாதை செலுத்துவதற்கும், அவர்களின் நினைவைப் போற்றுவதற்கும் இறந்துபோன முன்னோர்களின் ஆன்மாக்கள் சாந்தியடையவும், அவர்களின் பாவங்கள் நீங்கவும், அவர்களின் ஆசீர்வாதத்தைப் பெறவும் செய்யப்படும் ஒரு சடங்கு ஆகும். சிரார்த்தம் செய்வதால் குடும்பத்தில் ஒற்றுமையும், அமைதியும் நிலவும் என்று நம்பப்படுகிறது. இதை "திதி" என்றும் கூறுவர்.

**335)** ஆண்டுக்கு ஒரு முறை இறந்தவர்களின் திதியைக் கணக்கிட்டு கொடுப்பதுதான் சிரார்த்தம் என்றாலும், இறந்து போனவர்களுக்கு ஓராண்டுக்குள் 16 முறை சிரார்த்தம் கொடுக்க வேண்டும் என்று சாஸ்திரம் சொல்கிறது. அவற்றை **ஏகோதிஷ்ட ஸ்ரார்த்த சடங்கு** என்றும் கூறுவார்கள். இறந்தவரின் உடலில் உள்ள பதினாறு

தெய்வீக அம்சங்கள் சொர்க்கத்தை அடைவதையும் இது உறுதி செய்கிறது. அந்த ஸ்ரார்தங்களை **ஊன மாசிகாம், ஊன ஆப்திக மாசிகாம், திரிபத்ஷிக மாசிகம்** மற்றும் **மாதாந்திர மாசிகம்** என்றும் அழைப்பார்கள்.

**336)** ஒவ்வொரு வீட்டு வாசலிலும் அந்தந்த வீட்டு பித்ருக்கள் தர்பணத்தின் போதும் வந்து நின்று கொண்டு தங்களுக்குத் தரப்படும் எள் கலந்த தண்ணீரை பெற்றுக் கொள்கின்றார்கள் என்று கூறப்படுவதை போலவேதான் ஸ்ரார்த்த தினங்களிலும் அந்தந்த வீட்டு பித்ருக்கள் வீட்டிற்கு வந்து தங்களுக்குத் தரப்படும் உணவை பெற்றுக் கொள்வதற்காக காத்துக் கொண்டிருக்கிறார்கள்.

**337)** சிரார்த்தம் செய்யும்போது பித்ருக்கள் நம்மோடு மூன்று நாட்கள் வந்து தங்கிச் செல்வதாக ஐதீகம் உள்ளது. சிரார்த்தம் செய்வதற்கு முதல் நாள் அவர்கள் வந்து விடுவதாகவும் அதனால்தான் முதல் வருடத்தில் மாதா மாதம் செய்யப்படும் மாஸ்யம் அல்லது ஒரு வருடத்திற்கு பின் செய்யப்படும் சிரார்த்தத்தின் முதல் நாள் அன்று ஊன மாஸ்யம் எனும் சடங்கை அந்த காலங்களில் செய்தார்களாம். சிரார்த்தத்திற்கு மறு நாளும் பித்ருக்கள் நம்மோடு தங்கி இருந்து தமது ஆசீர்வாதங்களை அளித்தப் பின்னரே திரும்பிச் செல்வார்களாம்.

**338)** சிரார்த தினத்தன்று, வீட்டில் ஆசாரத்துடன் சமையல் செய்து வைத்து, இரண்டு புரோஹிதர்களை வைத்து ஹோமம், பிண்ட தானத்தையும் செய்து, அவரையும் வீட்டில் போஜனம் செய்ய வைத்து, தட்சணையும் கொடுத்து அனுப்புவதை **பர்வண சிரார்த்தம்** என்பார்கள்.

**339)** ஹோமம் பிண்டதானம் போன்ற சில காரியங்கள் இல்லாமல், வீட்டில் சமையல் செய்து வைத்து இரண்டு புரோஹிதர்களை அழைத்து, போஜனம் செய்ய வைத்து தட்சணை கொடுத்து அனுப்புவதை **சங்கல்ப சிராத்தம்** என்பார்கள்.

**340)** இரண்டு புரோஹிதர்களை வீட்டிற்கு அழைத்து அவர்களுக்கு வீட்டில் சாப்பாடு செய்து கொள்ள என்னென்ன பொருட்கள் தேவையோ - அரிசி காய்கறிகள், பருப்பு போன்ற அனைத்து பொருட்களையும் வாங்கிக் கொள்ள பணமும் அவருக்கான தட்சணையும், அளித்து செய்யப்படும் சிராத்தம் **ஆம சிராத்தம்** எனப்படும்.

**341)** சிராத்தம் செய்ய வசதி இல்லாதவர்கள் புரோஹிதரை கலந்தாலோசனை செய்து இரண்டு புரோஹிதர்களை வீட்டிற்கு அழைத்து அவர்கள் ஒவ்வொருவருக்கும் வாழைக் காயையும், ஒரு நாள் சமையலுக்கான அரிசியையும், தக்ஷிணைகளையும் கொடுத்து அனுப்புவது **ஹிரண்ய சிரார்த்தம்** எனப்படும்.

**342)** சிராத்தம் செய்ய வசதி இல்லாதவர்கள் கருப்பு எள் கலந்த தண்ணீரை விட்டு, பித்ருக்களை மனதில் வேண்டிக் கொண்டு தர்ப்பணம் செய்யலாம்.

**343)** சிரார்த்தங்களில் மறைந்த முன்னோர்களின் கோத்ரத்தையும் பெயரையும், நட்சத்திரத்தையும் இறந்து போன திதிகளையும் சிரார்த்த சடங்குகளை செய்யும் போது கூறுவார்கள். மந்திர உச்சாடனைகளுடன் அவற்றை உச்சாடனை செய்யும்போது, அவர்களின் திதியுடன் கூடிய ஜீவ சக்திகள், படைக்கப்படும் சிரார்த்த உணவோடு கலந்து விடும். இது நம் கண்களுக்கு தெரிவது இல்லை.

**344)** இதனால்தான் காந்தத்தைப் போன்ற தன்மை கொண்ட கோடிக்கணக்கான ஜீவ அணுக்கள் வான்வெளியில் இருந்தாலும், கர்மா செய்பவர் மற்றும் பங்காளிகள் ஸ்பரிஸம் பெற்ற சிரார்த்த உணவுகளில் இருந்து வெளியேறும் ஜீவ அணுக்களை, அவரவர்களது குடும்பங்களை சேர்ந்த பித்ருக்களால் மட்டுமே ஆவாஹித்துக் கொள்ள முடியும், ஒரு குடும்பத்தின் பித்ருக்களினால் மற்ற குடும்பத்து கர்மா செய்பவர்களின் உச்சாடனைகளில் இருந்து வெளிப்படும் ஜீவ அணுக்களை அணுகக் கூட முடியாதாம். இதுவே விசித்திரமான தெய்வ நியதியாகும் .

**345)** எதேர்சையாக சில வருடத்திற்கு முன்னர் இறந்து விட்ட தந்தையின் வருடாந்திர சிரார்த்தமும், அதற்கு அடுத்த சில வருடம் பொறுத்து இறந்து விடும் தாயாரின் மாசாந்திர மாசிகமும் சேர்ந்து வந்து விட்டால் என்ன செய்வது? தந்தையின் வருடாந்திர சிரார்த்தமும், தாயாரின் சிரார்த்தமும் ஒரே நாளில் வந்து விட்டால், முதலில் தந்தையின் வருடாந்திர சிராத்தம் செய்து விட்டு பிறகு மீண்டும் தனியே சமையல் செய்து தாயாரின் சிரார்த்தமும் செய்ய வேண்டும்.

**346)** எதேர்சையாக பெற்றோர்களின் வருடாந்திர சிரார்த்தமும், மாதப் பிறப்பு பண்டிகையும் சேர்ந்து ஒரே நாளில் வந்து விட்டால் என்ன செய்வது? பெற்றோர்களின் வருடாந்திர சிரார்த்தமும் மாதப் பிறப்பு பண்டிகையும் சேர்ந்து வந்தால் முதலில் மாதப் பிறப்பு பண்டிகையை செய்து விட்டு அதற்கு அடுத்தே பெற்றோர்களின் வருஷ சிரார்த்தத்தை செய்ய வேண்டும்.

**347)** உடல் நிலை சரியில்லாதவர்கள் அருகில் யாரையாவது உதவிக்கு வைத்துக் கொண்டு அவர்கள் மூலம் சிரார்த்தம் செய்ய செய்யலாம் என்கின்றது தர்ம சாஸ்திரம் .

**348)** சகோதரர்கள் தனித் தனியேத்தான் சிராத்தமும் செய்ய வேண்டும். ஒரே தெருவில் பக்கத்து, பக்கத்து வீட்டில் சகோதரர்கள் வசித்தாலும் கூட சிராத்தம் தனி தனியே தான் செய்ய வேண்டும. கூட்டுக் குடும்பமாக இருந்தால் அல்லது சகோதரர்கள் ஒன்று சேர்ந்து செய்தால் மூத்த சகோதரருடைய பக்கத்தில் அமர்ந்து கொண்டு அவரோடு சேர்ந்தே மந்திரங்களை ஓதி சிரார்த்தம் செய்ய வேண்டும்.

**349)** விபத்தில் பெற்றோர் காலமானால் யார் முதலில் இறந்தார்கள் என்பதை கணக்கில் கொள்ளாமல் ஒரே நாளில் இருவருக்கும் சிராத்தம் செய்ய வேண்டும். ஆனால் படைக்கப்படும் உணவு மற்றும் பாயசம் என்பவற்றை இருவருக்குமே தனித் தனி பாத்திரங்களில் செய்ய வேண்டும்.

## ஜீவாத்மாவின் பயணம் - 16
## தீட்டு காலம் மற்றும் மரண தீட்டைப் பற்றிய பொது விதிமுறைகள்:

**350)** ஒருவர் வீட்டில் மரணம் நிகழ்ந்தால், அவரோ அல்லது அவரது குடும்ப உறவினர்களோ 31 ஆம் நாள் சடங்கு முடியும் வரை இன்னொருவரின் மரண வீட்டிற்கு செல்லக் கூடாது.

**351)** தீட்டுக் காலத்தை ஸ்நானத் தீட்டு, பக்ஷிணீ தீட்டு, ஒரு நாள் தீட்டு, $1^{1/2}$ நாள் தீட்டு, மூன்று

நாட்கள் தீட்டு மற்றும் பத்து நாட்கள் தீட்டு எனப் பிரித்து உள்ளார்கள். தீட்டிலும் பிரசவ தீட்டு மற்றும் மரணத் தீட்டு என இரு வகை உண்டு.

**352)** தற்செயலாய் துர் மரணம் அடைவோருக்கு, அதாவது விபத்தில் உயிர் இழந்தவர் என யாராக இருந்தாலும், அவர்களுடைய உறவினர்களுக்கு தீட்டு உண்டு. ஆனால் உடனடியாக கர்மாக்களை செய்யாமல் 6 மாதம் கழித்து கர்மா செய்ய வேண்டும் என்பது விதி ஆயினும் 24 நாட்கள் கழித்து செய்ய வேண்டும் என்றும் ஒரு விதி உள்ளது.

**353)** ஆனால் தற்கொலை செய்து கொண்டவரின் குடும்பத்தினருக்கும், பங்காளிகளுக்கும் தீட்டு, தர்ப்பணம் போன்றவை கிடையாதாம். ஏன் எனில் அவர்கள் பிசாசாக மாறி விடுவதாக ஐதீகம். ஏன் எனில் அவ்வாறு மரணம் அடைந்தவர்களுக்கு செய்ய வேண்டிய சடங்கு முறைகள் தெளிவாக கூறப்படவில்லை. அவரவர் வீட்டு புரோகிதர்கள் கூறும்படி சடங்கு செய்ய வேண்டும்.

**354)** சன்யாசிகள் மரணம் அடைந்தால் அவர்களது வீட்டினருக்கும் பங்காளிகளுக்கும் தீட்டில்லை, செய்தியைக் கேட்ட பின் குளித்தால் போதும்.

**355)** 88 அடிகளுக்குள் பிணம் இருந்தால், அதை எடுக்கும்வரை, அருகில் உள்ள வீட்டினர் சமைப்பது, சாப்பிடுவது கூடாது.

**356)** மரண வீட்டில் சாப்பிட்டால் (கை நனைத்தல் என்றும் கூறுவார்கள்), அவர்கள் முப்பத்தி ஒரு நாட்கள் (31) எந்த ஆலயத்திற்கும் செல்லக்கூடாது என்கின்றது சாஸ்திரம்.

**357)** எவர் ஒருவர் வீட்டில் ஸ்ரார்தம் செய்தாரோ, அன்றைய தினம் ஸ்ரார்த்தம் முடிந்ததும் அவரோ அவர் குடும்பத்தினரோ மரண துக்கம் விஜாரிக்க இன்னொரு வீட்டிற்கு செல்லக் கூடாது.

**358)** தீட்டு முடியும்வரை தீட்டு உள்ள வீட்டினர் எந்த ஒரு புண்ணிய காரியங்களுக்கோ, புண்ணிய சடங்குகளுக்கோ அல்லது ஆலயத்துக்கோ செல்லக் கூடாது.

**359)** எத்தனைதான் அதிக வயதானவர் என்றாலும், தீட்டு உள்ள காலத்தில், தீட்டு இல்லாதவர்கள் அல்லது அதே வீட்டில் உள்ளவர் கூட அந்த வயதானவரை நமஸ்கரிக்கலாகாது.

**360)** ஒரு தீட்டுக்காரன் மற்றொரு தீட்டுக்காரனைத் தொடக் கூடாது. தீட்டுள்ளவன் வீட்டுக்கும் அவன் சாமான்களுக்கும் தீட்டுண்டு. ஆகவே தீட்டுள்ளவன் வீட்டுக்குச் சென்று விட்டு தம் வீடு வந்ததும் இன்னொரு முறை ஸ்நானம் செய்ய வேண்டும்.

**361)** இரங்கல் தெரிவிக்க மரணம் அடைந்தவர் வீட்டிற்கு செல்பவர்கள், தமது வீடு திரும்பிய பிறகு, தங்கள் கால்களை வீட்டிற்கு வெளியே தண்ணீர் விட்டு அலம்பிக் கொண்ட பின்னரே வீட்டிற்குள் நுழைய வேண்டும். பின்னர் உடனடியாக குளித்துவிட்டு, அவர்கள் அணிந்திருந்த/உடன் எடுத்துச் சென்ற அனைத்து ஆடைகளையும் நனைக்க வேண்டும். அதுவரை, வீட்டில் வேறு எந்தப் பொருளையும் தொடக் கூடாது. இவை சாஸ்திரங்களில் பரிந்துரைக்கப்பட்ட நியமனங்கள் ஆகும் .

**362)** ஒரு குடும்பத்தை சேர்ந்த ஆணுக்கு பிறக்கும் ஆண் குழந்தைகள் (மகன்கள்), அந்த ஆண் குழந்தைகளுக்குப் பிறக்கும் ஆண் குழந்தைகள் *(*பேரன்கள்*)*, அந்த ஆண் பேரன் குழந்தைகளுக்குப் பிறக்கும் ஆண் குழந்தைகள்*(*கொள்ளு பேரன்கள்*)*, அந்த ஆண் கொள்ளுப் பேரன் குழந்தைகளுக்குப் பிறக்கும் ஆண் குழந்தைகள் என வரிசையாக ஏழு தலைமுறை சந்ததியில் பிறக்கும் ஆண்கள் அனைவரும் பங்காளிகள் எனப்படுவர்.

**363)** ஏழு பங்காளிகள் குடும்பத்தில் (முதல் குடும்பம்) உள்ள எந்த ஆண் இறந்தாலும் அந்த ஏழு பங்காளிகள் குடும்பத்தினருக்கும் ஏற்படும் தீட்டு சமமாகவே இருக்கும்.

**364)** ஆனால் எட்டாவது பங்காளி குடும்பத்திற்கு முதல் ஏழு பங்காளிகளில் உள்ள முதல் குடும்ப பங்காளியின் தீட்டு கிடையாது. அது இரண்டாம் பங்காளியின் குடும்பத்தில் ஏற்படும் பிறப்பின் மற்றும் மரணத்தின் மூலமே ஏற்பட்டும்.

**365)** முதல் தலைமுறை முதல் ஏழாவது தலைமுறை வரை ஒரு பிரிவு பங்காளிகள்; இரண்டாம் தலைமுறை முதல் எட்டாவது தலைமுறை வரை மற்றொரு பிரிவு பங்காளிகள்; மூன்றாம் தலைமுறை முதல் ஒன்பதாவது தலைமுறை வரை மற்றொரு பிரிவு பங்காளிகள்; பங்காளிகள் என்று

அழைக்கப்படும் ஏழு தலைமுறை உறுப்பினர்கள் இந்த வழியில் இருப்பார்கள்.

**366)** ஒரு குடும்ப வம்சத்தில் ஏழு பரம்பரையினர் என்பவர்கள் யார்? உதாரணமாக ஒரு குடும்ப வம்சத்தில் பத்து பரம்பரையினர் உள்ளனர் என்று வைத்துக் கொள்வோம். அவர்களின் குடும்பத் தலைவர்கள் பெயர்கள் கோபாலன், கிருஷ்ணன், மாதவன், வாசுதேவன், சக்ரபாணி, உப்பிலி, ராமன், நந்தன், ரமேஷன் மற்றும் முகுந்தன் என்று வைத்துக் கொள்வோம்.

**367)** தீட்டுக் காலத்தை அனுஷ்டிக்கும் முதல் ஏழு பரம்பரையினர் கோபாலன், கிருஷ்ணன், மாதவன், வாசுதேவன், சக்ரபாணி, உப்பிலி மற்றும் ராமன் ஆவார்கள்.

**368)** அடுத்த ஏழு பரம்பரையினர் கிருஷ்ணன், மாதவன், வாசுதேவன், சக்ரபாணி, உப்பிலி, ராமன் மற்றும் நந்தன் ஆவார்கள்.

**369)** அதற்கு அடுத்த ஏழு பரம்பரையினர் மாதவன், வாசுதேவன், சக்ரபாணி, உப்பிலி, ராமன், நந்தன் மற்றும் ரமேஷன்.

**370)** அதற்கும் அடுத்த ஏழு பரம்பரையினர் வாசுதேவன், சக்ரபாணி, உப்பிலி, ராமன், நந்தன், ரமேஷன் மற்றும் முகுந்தன் ஆவார்கள். இப்படியாகவே ஏழு பரம்பரையினர் (பங்காளிகள்) எனும் கிளை உள்ளது.

**371)** ஒரு குடும்பத்தில் ஏழு வயதுக்குள் சிறுவனோ அல்லது சிறுமியோ மரணம் அடைந்து விட்டால் அதன் சொந்த சகோதரர்களுக்கும் சகோதரிகளுக்கும் தாய் தந்தைக்கும் மட்டுமே பத்து நாள் தீட்டு உண்டு. அந்த குடும்பத்தின் ஏழு தலைமுறையில் உள்ள பங்காளிகளுக்கு தீட்டுக் கிடையாது.

**372)** ஒரு குடும்பத்தில் உள்ளவர்கள் ஒருவருக்கொருவர் ஏழு ஆண்டுகள் தொடர்ந்து பார்க்காமலும், எந்த சம்மந்தமும் இல்லாமல் இருந்திருந்தால் ஒருவருக்கொருவர் குடும்பத்தில் ஏற்படும் மரணத்தில் மற்றவர்களுக்கு ஸ்நானத் தீட்டு மட்டுமே உண்டு. அவர்களுக்கு பத்து, மூன்று, ஒரு நாள் தீட்டு போன்றவைக் கிடையாதாம்.

**373)** வீட்டில் மரணம் நிகழ்ந்து விட்டால், ஒரு வருடத்திற்கு, அதாவது முதல் வருட சிரார்த்தம் வரும்வரை, நடக்கவிருக்கும் மங்களகரமான நிகழ்ச்சியைத் தள்ளிப் போடுவது வழக்கம். இறந்தவருக்கு முதல் திவசம் கொடுத்த பிறகே ஆலயத்துக்கு சென்று தேங்காய் உடைத்து அர்ச்சனை செய்து விட்டு அதன் பின் சுப காரியங்களை தொடங்க வேண்டும்.

**374)** ஆனால் அனைத்து சுப காரியங்களுக்கும் ஒரு வருட இடைவெளி என்று சொல்லும் சாஸ்திரங்கள், திருமண நிகழ்ச்சிக்கு மட்டும் தோஷமில்லை என்றே சொல்கிறது. திருமணம் நிச்சயிக்கப்பட்ட வீட்டில் எதிர்பாராமல் ஒரு மரணம் நிகழ்ந்து விட்டால் திருமணத்தை தள்ளிப் போடாமல் நடத்தி வைக்கலாம் என்று சாஸ்திரம் சொல்கிறது. இருப்பினும், திருமணத்திற்கு 15 நாட்களுக்கு முன்பு மரணம் ஏற்பட்டிருந்தால், 13 நாட்கள் சடங்கு முடிந்த பிறகு திருமணத்தை வேறொரு தேதிக்கு ஒத்தி வைக்க வேண்டும்.

**375)** எந்த தீட்டும், தீட்டு கால முடிவில் காலையில் எழுந்த உடன் குளித்து விட்டால் விலகி விடும் என்பார்கள். ஆனால் எந்த ஒரு தீட்டுக் காலமும் காலை 8 மணி 24 நிமிடத்திற்கு அப்பால்தான் விலகும் என்பதினால் தீட்டு காலம் முடிந்ததும் காலை 8.24 மணிக்கு பிறகே குளிக்க வேண்டும் என்கிறது சாஸ்திரம். அதற்கு முன்னால் குளித்தால் தீட்டு விலகியதாக எடுத்துக் கொள்ள முடியாது, அது தொடரும் என்கிறார்கள். ஆனால் தற்காலத்தில் இதை நடைமுறையில் வைத்திருக்க முடியவில்லை என்பதினால் விடியற்காலை ஐந்து மணிக்கு மேல் குளிப்பதில் தோஷம் இல்லை என்பதாக புரோஹிதர்கள் கூறுவார்கள். ஆகவே இது விஞ்ஞான அடிப்படையில் எழுந்துள்ள நியதி அல்ல, ஓரளவிற்கு ஆன்மிகம் மற்றும் தர்ம நெறி முறைகளின் அடிப்படையில் அமைந்ததே என்றே எடுத்துக் கொள்ள வேண்டும்.

**376)** ஒரு குடும்பத்தில் இரவு 1.30 மணி வரை யாராவது இறந்து விட்டால் அவரது மரணம் முதல் நாளைய கணக்கில் சேரும். 1.30 மணிக்கு மேல் இறந்தால் மறுநாள் கணக்கில் சேரும் என்கின்றது சாஸ்திரம்.

**377)** ஒருவர் வீட்டில் சிரார்த்த காரியம் நடைபெற்றுக் கொண்டு இருக்கிறது. சிரார்த்தம் நடந்து கொண்டு இருக்கும்போதே சிரார்த்தம் செய்பவருக்கு இன்னொரு இறப்பு தீட்டு வந்துவிட்டது எனும் போது சிரார்த்தம் முடிந்த பின்னர்தான் அந்த தீட்டு துவங்கும்.

**378)** எந்த ஒரு பிரும்மச்சாரிக்கும் தீட்டு இல்லை. ஸ்நானம் மட்டுமே உண்டு.

**379)** திருமணம் நடக்கும்போது, மணப்பெண் அல்லது மாப்பிள்ளையின் பெற்றோர்கள் இறந்து விட்டால், அந்த திருமணம் முடிந்து, மணமக்களின் கிரஹப் பிரவேச சடங்கும் முடிந்து சுபமாக திருமண சடங்கை முடித்து வைக்கும் சேஷ ஹோமம் செய்யும் வரை அவர்களுக்கு தீட்டு கிடையாதாம். சேஷ ஹோமம் என்பது சில தமிழ் பிராமண திருமணங்களில், பெரும்பாலும் நான்காவது நாளில், திருமணச் சடங்குகளின் நிறைவைக் குறிக்கும் முறையில் நடைபெறும் ஒரு வேத சடங்கு ஆகும். இது திருமண முகூர்த்தத்தில் பயன்படுத்தப்பட்ட நெய்யில் இருந்து சிறு துளி எடுத்து மணமகளின் தலையில் தெளித்து திருமணமானவர்களை ஆசிர்வதிக்கும் சடங்கு ஆகும். ஆகவே அதுவரை அவர்கள் எந்த துக்கத்தையும் கடைப்பிடிக்க வேண்டியதில்லை.

**380)** ஒருவர் பங்காளியின் மரணத் தீட்டை அனுஷ்டித்துக் கொண்டு உள்ள காலத்தில், அவர்கள் செய்ய வேண்டிய குடும்ப சிரார்த்த தினம் வந்து விட்டால் அவர்கள் அந்த தீட்டு முடியும்வரை அவர்கள் சிரார்த்தம் செய்யக் கூடாது. பண்டிதரிடம் அடுத்த தேதி கேட்டு சிரார்த்தம் செய்ய வேண்டும்.

**381)** ஒரு சன்யாசியின் தாய் அல்லது தந்தை இறந்தால் சன்யாசிக்கு ஸ்நானம் மட்டுமே உண்டு. அதற்குள் காரணம் அந்த சன்யாசியின் உடலை அவர்கள் ஈன்று எடுத்ததினால் அந்த உடலுக்கு தர வேண்டிய மரியாதை ஆகும் அந்த செயல். தீட்டு கிடையாது.

## தீட்டு காலம் : ஸ்நானத் தீட்டு:

**382)** திருமணம் ஆகி புகுந்த வீட்டுக்கு சென்று விட்ட பெண் இறந்து விட்டால் அவள் பிறந்த வீட்டுப்

பங்காளிகளுக்கு தீட்டில்லை. ஆனால் இறந்த சேதி கேட்டதும் குளிக்க வேண்டும். அதாவது அவர்களுக்கு ஸ்நானத் தீட்டு மட்டுமே உண்டு.

**383)** மற்ற உறவினர் இறந்தால் அதைக் கேட்டதும் ஸ்நானம் செய்தால் மட்டுமே போதுமானது. அதை தீட்டு என்பதாக கருதாமல், குளிக்கும்வரை அந்த தீட்டை ஆசாரம் அற்ற நேரமாக அதாவது விழுப்பு என்று கருதுவார்கள். ஒருவேளை அந்த செய்தி வரும் முன்னரே அவர்கள் ஏற்கனவே குளித்து விட்டு இருந்தாலும் மரண செய்தியைக் கேட்டதும் மீண்டும் ஒருமுறை அவர்கள் ஸ்நானம் செய்ய வேண்டும்.

**384)** பத்து நாள் தீட்டு காலம் உள்ளவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் அனுஷ்டிக்க வேண்டிய பத்து நாள் கால தீட்டு செய்தியை அவர்கள் ஒரு வருடத்துக்கு பிறகு கேட்டால் அது தீட்டாக கருதப்பட மாட்டாது. அந்த செய்தி கேட்டதில் இருந்து குளிக்கும்வரை அதை ஆசாரம் அற்ற நேரமாக கருதி ஒரு ஸ்நானம் மட்டும் செய்தால் அதுவே போதுமானது.

**385)** ஒருவர் மரணம் அடைந்து விட்டப் பின் அவருக்காக மூன்று நாட்கள் தீட்டு காக்க வேண்டிய பங்காளிகளுக்கு அந்த செய்தி மரணம் நிகழ்ந்த நாளில் இருந்து பதினோராம் நாள் விடியற் காலையில் கிடைத்தால் அவர்களுக்கு மூன்று நாட்கள் தீட்டு கிடையாது, ஸ்நானம் செய்தால் அது மட்டும் போதுமானது.

**386)** சகோதரியின் கணவர்கள் மரணம் அடைந்தால் அந்த சகோதரியின் சகோதரர்கள் ஸ்நானம் செய்தால் அது மட்டும் போதுமானது.

**387)** அதே போல திருமணம் ஆன சகோதரிகள் மரணம் அடைந்தாலும் அந்த சகோதரியின் சகோதரர்கள் ஸ்நானம் செய்தால் அது மட்டும் போதுமானது.

**388)** ஒருவர் வீட்டு மாப்பிள்ளை இறந்தால் மாமனார் மற்றும் மாமியாருக்கு ஸ்நானத் தீட்டு.

## தீட்டு காலம் : ஒரு நாள் தீட்டு

**389)** மூன்று நாட்கள் துக்கம் அனுசரிக்க வேண்டிய ஒரு குடும்ப உறுப்பினரின் மரணம் குறித்த செய்தி, இறந்த

மூன்று நாட்களுக்குப் பிறகு உறவினர்கள்/பங்காளிகளுக்கு கிடைத்தால், ஒரு நாள் தீட்டு காலம் மட்டுமே போதுமானது.

**390)** பத்து நாட்கள் துக்கம் அனுசரிக்க வேண்டிய ஒரு குடும்ப உறுப்பினரின் மரணம் குறித்த செய்தி, இறந்த ஆறு மாதங்களுக்கு பிறகு உறவினர்கள்/பங்காளிகளுக்கு கிடைத்தால், ஒரு நாள் தீட்டு காலம் மட்டுமே போதுமானது.

## தீட்டு காலம் : ஒன்றரை நாள் பக்ஷிணீ தீட்டு

**391)** ஒன்றரை நாள் தீட்டை பக்ஷிணீ தீட்டு என்பார்கள். பக்ஷிணீ என்பது 90 நாழிகைகள் கொண்ட காலம். அது பண்டைய கால சாஸ்திர அளவாகும்.

**392)** பக்ஷிணீ தீட்டு காலம் என்பது இரண்டு பகலும் ஓர் இரவும் அல்லது இரண்டு இரவும் ஒரு பகலும் கொண்ட நேரம் ஆகும்.

**393)** பக்ஷிணி தீட்டு காலம் உள்ளவர்களுக்கு பகலில் மரணச் செய்தி கிடைத்தால், அந்த நாளின் இரவு மற்றும் அடுத்த நாள் பகல் மற்றும் இரவு நேரத்தை துக்கக் காலமாகக் கடைப்பிடிக்க வேண்டும். அதாவது செய்தி கிடைத்த இரவு + மறுநாள் பகல்+ மறுநாள் இரவு என்றாகும். மறு நாளைக்கு மறுநாள் அதிகாலையில் குளித்தால் மட்டுமே தீட்டு விலகும்.

**394)** அதேபோல், மரணச் செய்தி இரவில் கிடைத்தால், அந்த இரவையும் அடுத்த இரண்டு நாள் பகல் வேளையையும் துக்கக் காலமாகக் கடைப்பிடிக்க வேண்டும். அதாவது ஒரு இரவு + மறுநாள் பகல்+ அன்று இரவு + அடுத்த நாள் பகல் என்றாகும். அவர்கள் இரண்டாவது நாள் இரவில் அல்லது மூன்றாம் நாள் அதிகாலையில் குளித்தால் மட்டுமே தீட்டு விலகும்.

**395)** பக்ஷிணி தீட்டை 36 மணி நேரத்துக்குப் பிறகு அதாவது காலையில் கேட்டால் ஒரு பகல் தீட்டு, இரவில் கேட்டல் ஒரு இரவு தீட்டு மட்டுமே உண்டு.

**396)** பத்து நாள் தீட்டு காலம் உள்ளவர்கள் யாராக இருந்தாலும் அவர்கள் அனுஷ்டிக்க வேண்டிய பத்து நாள் கால தீட்டை பற்றி மூன்று மாதங்களுக்கு மேல், ஆனால்

அடுத்த ஆறு மாதங்களுக்கு முன்னால் கேட்டால் அவர்கள் மூன்று நாட்கள் கூட தீட்டு காக்கத் தேவை இல்லை. அவர்கள் செய்தி கேட்டதில் இருந்து ஒன்றரை நாட்கள் தீட்டு காத்தால் அது மட்டுமே போதுமானது.

**397)** ஆனால் அதே செய்தியை அந்த குடும்பத்தினர் ஆறு மாதங்களுக்கு மேல், ஆனால் ஒரு வருடத்துக்கு முன்னால் கேட்டால், அந்த செய்தியைக் கேட்டதில் இருந்து ஒரு நாள் தீட்டு காத்தால், அது மட்டுமே போதுமானது.

## தீட்டு காலம் : மூன்று நாட்கள் தீட்டு : பத்து நாட்கள் தீட்டு

**398)** திருமணம் ஆகி புகுந்த வீட்டுக்கு சென்று விடும் பெண்களுடைய கோத்திரம் புகுந்த வீட்டுக் கோத்திரமாகி விடுவதினால் அவர்களுக்கு பிறந்த வீட்டு தீட்டு கிடையாது. அவளுடைய தாய் மற்றும் தந்தை இறந்தால் மட்டுமே அந்தப் பெண்ணிற்கு **மூன்று நாட்கள் தீட்டு** உண்டாம்.

**399)** ஒருவருடைய மரணத்தினால் (‘**Y**’ குடும்பம்) இன்னொரு குடும்பத்தினருக்கு (‘**X**’ குடும்பம்) **பத்து நாட்கள் தீட்டு** ஏற்படும் என்ற நிலை. ‘**Y**’ குடும்ப மரணம் குறித்த அதே செய்தி பத்தாவது நாள் காலையில், தெரிய வருகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்போது **'X'** குடும்பத்தின் தீட்டு காலம் முதல் தீட்டு காலமான பத்தாவது நாளோடு போய் விடும். அதாவது பதினோராம் நாள் குளித்த பின் இரண்டு தீட்டும் போய் விடும்.

**400)** ஆனால் அதே செய்தி அவர்களுக்கு பதினோராம் நாள்- குளித்த பின்னரோ அல்லது குளிக்கும் முன்னரோ- எப்போது கிடைத்தாலும் மீண்டும் **மூன்று நாட்கள் தீட்டு** காக்க வேண்டும்.

**401)** ஆனால் அதே செய்தி அவர்களுக்கு 30 நாட்களுக்கு பிறகு எப்போது கிடைத்தாலும் மீண்டும் **பத்து நாட்கள் தீட்டு** காக்க வேண்டும்.

**402)** ஒருவருடைய மரணத்தினால் (‘Y’ குடும்பம்) இன்னொரு குடும்பத்தினருக்கு (‘X’ குடும்பம்) **மூன்று**

**நாட்கள் தீட்டு** ஏற்படும் என்ற நிலை. 'Y' குடும்ப மரணம் குறித்த அதே செய்தி பத்தாவது நாள் காலையில், தெரிய வருகிறது என்று வைத்துக் கொள்வோம். அப்போது 'X' குடும்பத்தின் தீட்டு காலம் முதல் தீட்டு காலமான மூன்றாம் நாளோடு போய் விடும். அதாவது நான்காம் நாள் குளித்த பின் இரண்டு தீட்டும் போய் விடும்.

**403)** ஆனால் அதே செய்தி அவர்களுக்கு 10 நாட்களுக்கு பிறகு 13 நாட்களுக்கு முன்னால் எப்போது கிடைத்தாலும் ஸ்நானம் செய்தால் தீட்டு போய் விடும்.

**404)** ஆனால் அதே செய்தி அவர்களுக்கு 13 நாட்களுக்கு பிறகு எப்போது கிடைத்தாலும் மீண்டும் **மூன்று நாட்கள் தீட்டு** காக்க வேண்டும்.

**405)** ஒரு குடும்பத்தில் தாய் தந்தையின் மரணத்தை அவர்களது மகன்களோ, திருமணம் ஆகாத பெண்களோ எப்போது கேட்டாலும், அதாவது எதோ தவிர்க்க முடியாத காரணத்தினால், மூன்று மாதங்கள், ஆறு மாதங்கள் அல்லது ஒரு வருடத்துக்குப் பிறகு கிடைக்கிறது என்று வைத்துக் கொள்வோம். தாய் மற்றும் தந்தை இறந்து எத்தனைக் காலம் ஆனாலும் சரி, அது குறித்து முதல் செய்தி எப்போது கேட்டாலும் சரி, அந்த செய்தி கிடைத்த நாள் முதல் அடுத்த **பத்து நாட்கள் தீட்டு** உண்டு.

**406)** மனைவி தனது கணவரின் மரணச் செய்தியை எப்போது பெற்றாலும் - உடனடியாகவோ அல்லது சில நாட்கள்/சில வாரங்கள்/சில மாதங்கள் அல்லது வருடங்களுக்குப் பிறகு பெற்றாலும் கூட, தனது கணவரின் மரணத்திற்காக **பத்து நாட்கள் தீட்டு** அனுசரிக்க வேண்டும்.

**407)** ஒருவருடைய மரணத்தினால் ('Y' குடும்பம்) இன்னொரு குடும்பத்ினருக்கு ('X' குடும்பம்)மூன்று நாட்கள் தீட்டு உள்ளது என்ற நிலை. ஆனால் **பத்து நாட்கள் தீட்டு** அனுஷ்டிக்க வேண்டிய 'Y' குடும்ப மரணம் குறித்த செய்தி இன்னொரு செய்தி மூன்று நாட்கள் தீட்டு காலத்தில் வந்துவிட்டது என்று வைத்துக் கொள்வோம். அப்போது 'X' குடும்பத்தின் தீட்டு காலம் முதல் தீட்டு காலமான மூன்றாவது நாளோடு போய் விடாது. மேலும் ஏழு நாட்கள் தீட்டு காத்த பின்னர் பத்தாம் நாளன்றுதான் போகும்.

**408)** ஒருவருடைய மரணத்தினால் (‘Y’ குடும்பம்) இன்னொரு குடும்பத்தினருக்கு (‘X’ குடும்பம்)மூன்று நாட்கள் தீட்டு உள்ளது என்ற நிலை. ஆனால் பத்து நாட்கள் தீட்டு அனுஷ்டிக்க வேண்டிய ‘Y’ குடும்ப மரணம் குறித்த செய்தி இன்னொரு செய்தி மூன்று நாட்கள் தீட்டு காலம் முடிந்து நான்காம் நாள் வந்துவிட்டது என்று வைத்துக் கொள்வோம். அப்போது 'X' குடும்பத்தின் தீட்டு காலம் முதல் தீட்டு காலமான மூன்றாவது நாளோடு போய் விடாது. மேலும் **பத்து நாட்கள் தீட்டு** காத்த பின்னர் பத்தாம் நாளன்றுதான் போகும்.

**409)** ஒரு குழந்தை பிறந்த பின் பத்து நாட்களுக்குள் இறந்து விட்டால், பெற்றோர்களுக்கு குழந்தை பிறப்பினால் இருந்த பிறப்பு தீட்டும், குழந்தையின் இறப்பு தீட்டும் சேர்ந்து **பத்தாவது நாள் இரண்டு தீட்டும்** முடிவடைந்து விடும். அதாவது பிறப்பு தீட்டும், இறப்பு தீட்டும் சேர்ந்து சம காலத்தில் முடிந்து விடும்.

**410)** 13 நாள் கர்மாக்களை செய்து கொண்டிருக்கும் ஒருவருக்கு, 13 நாட்கள் சடங்கு முடியும் முன்னால், குழந்தையின் பிறப்பு தீட்டும், இறப்பு தீட்டும் குறித்த செய்தி 12 நாட்களுக்குள் என்று வந்தாலும் (தனித்தனியே வந்தாலும் சரி, சேர்ந்தே வந்தாலும் சரி), 13 ஆம் நாள் காலை குளித்ததும் அனைத்து தீட்டும் போய் விடும்.

**411)** ஆனால் அதே குழந்தையின் மரண செய்தி 13 ஆம் நாள் சடங்கு முடிந்ததும் வந்தால் பெற்றோர்களுக்கு மீண்டும் **பத்து நாட்கள் தீட்டு** உண்டு.

**412) பத்து நாள் தீட்டு** உள்ள ஆண் ஒருவர் நோயினால் குளிக்க முடியாத நிலையில் பாதிக்கப்பட்டு படுத்த படுக்கையில் கிடக்கிறார். அப்படி என்றால் அவருடைய தீட்டு எப்படி விலகும்? அப்படிப்பட்ட நோயாளியை எவராவது ஒருவர் தொட்டு விட்டு குளிக்க வேண்டும். குளித்தப் பின் மீண்டும் தொட்டு விட்டு குளிக்க வேண்டும். இப்படியாக பத்து முறை தொட்டு விட்டு பத்து முறை குளித்தால் நோயால் படுத்துள்ளவரின் தீட்டு சாஸ்திரத்தின்படி விலகி விடுமாம். நோயால் படுத்திருப்பவருக்கு பதிலாக இன்னொருவர் பத்து முறைக் குளிப்பதின் மூலம் பத்து நாளைய கர்மாவில் நோயால் படுத்துள்ளவர் கலந்து கொண்டு விட்டதாக தேவர்கள்

ஏற்றுக் கொள்வார்களாம். ஆனால் அந்த நோயாளி நோய் விலகி வீடு திரும்பியதும் வீட்டில் புண்யாவசனம் செய்ய வேண்டும். இது முழுமையாக நம்பிக்கையின் அடிப்படையில், தர்ம சாஸ்திர முறையில் அமைந்த விதியாகும், விஞ்ஞான பூர்வமான காரணம் எதுவும் கிடையாது.

**413)** இந்து தர்மத்தில் சில விஜித்திரமான தீட்டு காலம் உள்ளது. முதலாவது நிகழ்வு - ஒருவருடைய தந்தை இறந்து விட்டார். அவரது சடங்குகள் நடைபெற்றுக் கொண்டு உள்ளபோது, தந்தை இறந்து பத்து நாட்களுக்குள் தாயாரும் இறந்து விட்டால் சடங்குகளை நிறுத்த மாட்டார்கள். ஆனால் இருவருக்கும் செய்ய வேண்டிய 12 நாட்கள் சடங்குகளை புரோஹிதர் கூறும் ஆலோசனையை ஏற்று அதன்படி செய்து முடிக்க வேண்டும். தந்தையின் பத்து மற்றும் தாயாரின் பத்து நாள் தீட்டு இரண்டும் சேர்ந்தே, மொத்த தீட்டு காலமும் 13 ஆம் நாள் சுபஸ்வீகாரத்தோடு விலகி விடும்.

**414)** இரண்டாவது நிகழ்வு - தாயாரின் மரணம் தந்தையின் சடங்குகள் நடக்கும் 11 அல்லது 12 ஆம் நாள் ஏற்பட்டால் தந்தைக்கான சுபஸ்வீகாரம் 13 ஆம் நாள் செய்ய முடியாது, தந்தை இறந்து விட்ட 14 ஆம் நாள்தான் செய்ய முடியும். அன்றுதான் இரண்டு தீட்டும் விலகும். ஆனால் அதற்குள் இருவருக்கும் செய்ய வேண்டிய 12 நாட்கள் சடங்குகளை புரோஹிதர் கூறும் ஆலோசனையை ஏற்று அதன்படி செய்து முடிக்க வேண்டும்.

**415)** தாயாரின் மரணம் தந்தையின் சடங்குகள் நடக்கும் 13 ஆம் நாள் ஏற்பட்டால் தாயாருக்காக **பத்து நாள் தீட்டு** உண்டு. ஆகவே 13 ஆம் நாள் தந்தைக்கு செய்ய வேண்டிய சுபஸ்வீகாரம் தாயாரின் சுபஸ்வீகாரத்துடன் 26 ஆம் நாள்தான் செய்ய முடியும். இது குறித்து இருவருக்கும் செய்ய வேண்டிய 12 நாட்கள் சடங்குகளை புரோஹிதர் கூறும் ஆலோசனையை ஏற்று அதன்படி செய்து முடிக்க வேண்டும்.

**416)** ஒருவருடைய தாயார் இறந்து விட்டார். அவரது சடங்குகள் நடைபெற்றுக் கொண்டு உள்ளபோது, தந்தை இறந்து விட்டால், தந்தை என்று இறந்தாரோ அன்றில் இருந்து **பத்து நாட்கள் தீட்டு** உண்டு. உதாரணமாக

தாயாரின் மரண சடங்குகள் நடந்து கொண்டிருக்கும்போது ஐந்தாம் நாளன்று தந்தை மரணம் அடைந்து விட்டால் இருவரது தீட்டும் தந்தை மரணம் அடைந்த 5 + 10 = 15 ஆம் நாள் அன்றுதான் போகும். அதற்கு பின்னரே மீதம் உள்ள 11 மற்றும் 12 ஆம் நாள் சடங்குகளை செய்த பின் அதற்கு அடுத்த நாள் வீட்டில் சுபஸ்வீகாரம் செய்ய முடியும். சடங்கு கீழ் கண்டவாறு செய்யப்படும்:

- பண்டிதரின் வழிகாட்டுதலின்படி தாய்க்கு செய்யப்படும் முதல் ஐந்து நாட்கள் சடங்குகள் நடைபெற்ற பின் சடங்கு நிறுத்தப்படும் (ஐந்தாம் நாள் தந்தையின் மரண செய்தி கிடைத்த பின்).
- ஆறாவது நாளில் இருந்து அடுத்த ஐந்து நாட்கள் தந்தைக்கான முதல் ஐந்து நாட்கள் சடங்கு நடைபெறும்.
- அடுத்த நாளிலிருந்து (அதாவது பத்தாவது நாளில் இருந்து) மீதமுள்ள ஏழு நாட்கள் சடங்குகள் (12வது நாள் வரை) தாய் மற்றும் தந்தை இருவருக்கும் ஒரே நேரத்தில் செய்யப்படுகின்றன.
- இவ்வாறு மொத்தம் 17 நாட்கள் சடங்குகள் முடிக்கப்பட்டு 18வது நாளில் சுபஸ்வீகாரம் நடத்தப்படுகிறது.

**417)** ஒரு குடும்பத்தில் தாயாரோ அல்லது தந்தையோ இறந்து விட சடங்குகள் நடைபெற்றுக் கொண்டு உள்ளன. அந்த சடங்குகள் முடியும் முன்னரே அந்த குடும்பத்தில் உள்ள மகன்களின் மனைவிகளோ, இல்லை மகன்களின் மகள்களோ அல்லது மகன்களோ, அல்லது திருமணம் ஆகாமல் வீட்டில் உள்ள மகளோ யார் இறந்து விட்டாலும் அந்த குடும்பத்தில் உள்ள அனைவருக்குமே முந்தய தீட்டோடு பிந்தைய தீட்டும் போய் விடும். அதாவது தாயாரோ அல்லது தந்தையோ இறந்து விட்டதினால் ஏற்பட்ட பத்து நாள் தீட்டு முடியும் அதே தேதியிலேயே மேலே கூறிய நிலையில், அதாவது மகன்களின் குடும்பத்தில் ஏற்படும் மரணத்தினால் (மகன்களின் மனைவிகளோ, இல்லை மகன்களின் மகள்களோ அல்லது மகன்களோ, அல்லது திருமணம் ஆகாமல் வீட்டில் உள்ள மகளோ மரணம் அடைந்து விட்டதினால்) ஏற்பட்ட தீட்டும் சுபஸ்வீகாரத்துக்கு முன்னால் குளித்ததும் விலகி விடும்.

**418)** தந்தையின் முதல் மனைவி உயிருடன் இருக்கையில், அவர் சட்டப்படி மணம் செய்து கொள்ளாமல் மேலும் சிலரை திருமணம் செய்து கொண்டு இருந்தால் அவருடைய இரண்டாம் மனைவி அல்லது மூன்றாம் மனைவி என யார் மரணம் அடைந்தாலும் தந்தையின் மூலம் பிறந்த பிள்ளைகள் மற்றும் பெண்களுக்கும் பத்து நாட்கள் தீட்டு உண்டாம். ஆனால் அந்த செய்தியை அவர்கள் ஒரு வருடத்துக்குப் பிறகு கேட்டால் தீட்டு காலம் மூன்று நாள் மட்டுமே.

**419)** மனைவி கர்பமாக இருந்தால் அவளது கணவர் வேறு எவருடைய சவத்தையும் தூக்கக் கூடாது. ஆனால் அவருடைய தாய், தந்தை அல்லது சந்ததி இல்லாத மூத்த சகோதரர்களின் சவத்தை சுமக்க தடை இல்லை.

## தீட்டு காலம் : பத்து நாள் தீட்டு (ஒரு குடும்பத்தினருக்கு)

ஒரு குடும்பத்தினருக்கு கீழ் கண்டவர்களின் மரணத்தினால் பத்து நாட்கள் தீட்டு உண்டு.

- தந்தை, தாய்
- உடன் பிறந்த சகோதரர்கள்(ஸமானோதர சகோதரர்கள் என்பார்கள்), அவர்களது மனைவிகள்
- உடன் பிறந்த சகோதரர்களின் ஏழு வயதுக்கு மேல் ஆன ஆண் மகன்கள்.
- உடன் பிறந்த சகோதரர்களின் ஏழு வயதுக்கு கீழ் ஆன ஆண் மகன்கள் மரணம் அடைந்தால் ஸ்நான தீட்டு மட்டும் உண்டு. ஆனால் அவர்கள் பூணூல் போட்டு இருந்தால் பத்து நாட்கள் தீட்டு உண்டு.
- உடன் பிறந்த திருமணம் ஆகாத சகோதரிகள்
- தந்தைக்கு எத்தனை மனைவிகள் ('ஸபத்னீமாதா'க்களின்) இருந்தாலும் அவர்களுடைய மகன்கள் (அவர்களை 'பின்னோதர சகோதரர்கள்' அதாவது தனது தந்தை மூலம் மாற்றாம் தாய்க்கு பிறந்த ஆண்கள் என்பார்கள்)
- தந்தையின் தாய் மற்றும் தந்தை (தந்தை வழி பாட்டி மற்றும் தாத்தா)

- தந்தையின் சகோதரர்கள் மற்றும் அவர்களது மனைவிகள் (பெரியப்பா, பெரியம்மா, சித்தப்பா மற்றும் சித்தி)
- தந்தை வழி பெரியப்பா மற்றும் சித்தப்பாவின் மகன்களும் (பின்னோத்ரன் அல்லது ஒன்று விட்ட சகோதரர்கள் என்பார்கள்) அவர்களது மனைவிகளும்
- 7 தலை முறை தந்தை வழி பங்காளிகள் (ஒரு ஆணுக்கு பிறக்கும் ஆண் குழந்தைகள், அந்த ஆண் குழந்தைகளுக்குப் பிறக்கும் ஆண் குழந்தைகள் என வரிசையாக வரும் சந்ததியில் ஏற்படும் அனைத்துக் கிளைகளிலும் உள்ள *ஆண்கள் அனைவரும் 'ஸபிண்டர்கள்' அல்லது 'க்ஞாதி' அல்லது 'தாயாதிகள்'எனப்படுவர்).

## தீட்டு காலம் : பத்து நாள் தீட்டு (ஸ்வீகாரம் போன ஆண் மகனுக்கு)

கீழ் கண்டவர்களின் மரணத்தினால் ஸ்வீகாரம் போன ஆண் மகனுக்கு பத்து நாட்கள் தீட்டு உண்டு.

- ஒரு குடும்பத்து ஆண் மகன் இன்னொருவருக்கு ஸ்வீகாரமாகி விட்டால் ஸ்வீகாரம் போன ஆண் மகனுக்கும் அவனது மனைவிக்கும் ஸ்வீகரித்த தந்தை மற்றும் ஸ்வீகரித்த தாயாரின் மரணம். (குறிப்பு:- ஒருமுறை இன்னொருவருக்கு ஸ்வீகாரம் போய் விட்டால் சாஸ்திரங்களின்படி ஸ்வீகாரம் எடுத்தவர்களே அவர்களுடைய தாயார் மற்றும் தந்தை ஆவார்கள்)
- 7 தலை முறை ஸ்வீகரித்த தந்தை வழி பங்காளிகள்

## 420) தீட்டு காலம் : பத்து நாள் தீட்டு (குழந்தை மரணம்)

- ஒரு குடும்பத்து ஆண்களுக்கு பிறந்து பத்து நாட்களே ஆன ஆண் குழந்தை அல்லது மணமாகாத பெண் குழந்தை என எந்த குழந்தை இறந்தாலும் கீழ்கண்டவர்களுக்கு மட்டும் பத்து நாள் தீட்டு.
- இறந்த குழந்தையின் தந்தை, தாய், மற்றும் மணமான சகோதரர்கள் மற்றும் பின்னோதர சகோதரர்கள்

(அதாவது தனது தந்தை மூலம் மாற்றாம் தாய்க்கு பிறந்த ஆண்கள் என்பார்கள்)

## மேலே கொடுக்கப்பட்டுள்ள துக்க நாட்கள் பின்வரும் புத்தகங்களில் காணப்படும் தகவல்களை அடிப்படையாகக் கொண்டவை:

**421)** பல காலமாக போதிக்கப்பட்டு வந்திருந்த தர்ம சாஸ்திர நெறி முறைகளை ஆராய்ந்து அவற்றை தொகுத்து அளித்திருந்ததில் காலம் காலமாக முன்னோடியாக காட்டப்படுவது கிரந்த மொழியில் எழுதப்பட்டுள்ளதாக கூறப்படும்

- **'வைத்தியநாத தீக்ஷிதீயம் ஆசௌச காண்டம்'** என்பதாகும்.

அதைத் தவிர

- **17 ஆம் நூற்றாண்டில் தமிழாசுர முனிவர்** என்பவர் எழுதி உள்ள **'ஆசௌச தீபிகை'**
- **1882 ஆம் ஆண்டில்** யாழ்பாணத்தை சேர்ந்த **வண்ணை மா. வைத்தியலிங்க பிள்ளை** வெளியிட்டு உள்ள **'ஆசௌச தீபிகை'**,
- **எழு நூறு வருடங்களுக்கு முன்னர்** சிதம்பரத்தில் வாழ்ந்த **அகோர சிவாச்சாரியார்** என்பவரினால் ஆகம நூல்களில் இருந்து எடுத்து தொகுக்கப்பட்டு எழுதப்பட்ட **'அகோர சிவ பத்ததி'** என்னும் சைவ சமயக் கிரியைகளுக்கான கை நூல்
- **மஞ்சன்குடி வெங்கடராம சாஸ்திரிகள்** எழுதிய **'ஸம்க்ஷேப தர்ம சாஸ்திரம்'**
- **நித்யகாம்ய மஹாயக்ஞ சமிதி**யின் **'ஆசௌசச் சுருக்கம்'**
- **1933 ஆம் ஆண்டு** திருவையாறு **ஸ்ரீநிவாஸ பிரஸ் வெளியீடான 'அபிநவாசௌச ஸங்கரஹம்'**
- **ஸ்ரீ ஜகத் குரு டிரஸ்ட்** வெளியீடான **'இறப்பு தீட்டு'**
- **1937 ல்** தஞ்சை மாவட்டம் பாபனாசம் தாலுகா **கீழவிடயல் கிராமம் ஸ்ரீ ஆர். முத்துசாமி அய்யர்** எழுதி வெளியிட்டுள்ள **'வர்ணாஸ்ரம தர்ம சாஸ்திரம்'**

- கொக்குவில் வைதீககிரியாரத்னம் மயிலணி **பிரும்மஸ்ரீ சோமாஸ்கந்த குருக்கள்** எழுதி உள்ள '**சிரார்த்த நியமங்கள்**' மற்றும்
- சென்னை திருவல்லிக்கேணி **காரிமாறன் கலைகாப்பகம்** வெளியிட்டு உள்ள '**சூதகமும் ஆசௌசமும்**' எனும் புத்தகம் போன்றவற்றில் மரணத் தீட்டு மற்றும் அதன் சடங்குகள் பற்றிய பல அரிய செய்திகள் உள்ளன.

**422)** தீட்டு காலம் குறித்த விவரங்களை மேல் கூறிய நூல்களில் காணப்பட்ட செய்திகளின் அடிப்படையில் தொகுத்து எழுதி உள்ளேன். பண்டை காலத்தில் பிரசுரிக்கப்பட்டுள்ள புத்தகங்களில் காணப்படும் பல செய்திகள் எளிதில் பாமர மக்களுக்கு விளங்கவில்லை என்பதினால் , பல வார்த்தைகளுக்கான விளக்கத்தை அகராதிகளில் தேடித் பார்த்து முடிந்தவரை அவை அனைத்தையும் விளக்கி உள்ளேன்.